# பொம்மைக் குடித்தனம்

நார்வே நாட்டு நாடக கவீந்திரர்

ஹென்றிக் இப்ஸன் இயற்றியதை

சீதாலக்ஷ்மி அம்மாள்

[redacted] தேசத்துப் பழக்க வழக்கங்களுக் கேற்றபடி

தமிழில் அமைத்தெழுதியது






சீதாலக்ஷ்மி அம்மாள்

"சந்திர விலாஸ்," எட்வர்டு எலியட் ரோடு,

மயிலாப்பூர்-சென்னை

விலை 0—3—0]    1925    [காபிரைட்

வேண்டுகின்றனர். இந்தக் கிளர்ச்சி, மேல் நாடுகளிற் போல இந் நாட்டு ஸ்திரீகளுக்குள் இன்னும் அவ்வளவு மிகுந்து காண வில்லை யெனினும், சிறிது மில்லை என்று சொல்ல ஒண்ணாது. எனது நண்பர் ஸ்ரீமான் ஸி. சுப்பிரமணிய ஐயரின் பத்தினியார், ஸ்ரீமதி சீதாலக்ஷ்மியம்மாள், இந்த நாடகத்தை ஆங்கிலத்திலிருந்து (Doll's House) தமிழில் அமைத் தெழுதியிருப்பதே இதற்குச் சான்றாகும். விரிவஞ்சி நாடகத்தின் பெரும் பகுதி கதைப்போக்கில் எழுதப்பட்டிருப்பினும், இப்ஸன் எடுத்துக்கொண்ட விஷயமும், அவர் கருத்தும் தெளிவாய் விளங்குகின்றன; தமிழ் நடையும், மூலத்திற் கேற்க முறுக்காய்ச் செவ்விதாய் அமைந்திருக்கின்றது. தமிழ் நாட்டுப் பெண்மணிகளும் பிறரும், தம்மில் ஒரு சகோதரி எழுதி யுதவிய இந் நூலை உகந்து படித்து, சிந்திக்கக் கடவர்; தவிர, இதைப்போன்ற வேறு சில நூல்களையும், ஆங்கிலம் அறியாத் தமிழ் மக்களுக்கு, இவ்வாசிரியர் மொழிபெயர்த் துதவுமாறு, ஊக்க மளிப்ப ரென்று நம்புகிறேன்.

அ. மாதவையர்

# பொம்மைக் குடித்தனம்.

மதுராபுரி என்னும் பட்டணத்திலே, ஹேமனாத் என்னும் பெயரையுடைய காச்மீர தேசத்துப் பிராமணரொருவர் வசித்துவந்தார், அவர் வியாபாரத் தொழிலினால் மிக்க தனவந்தராகி, அவ்வூரில் மிகுந்த கௌரதை வாய்ந்தவருள் ஒருவராக இருந்தார். அவருக்கு, கமலா பாய் என்னும் பெயரையுடைய ஒரேயொரு மகள் இருந்தாள். அவளை மிகவும் அன்பு பாராட்டி, அருமையாக வளர்த்துவந்தார். அவளும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து, பதினைந்து வயதுள்ள பாலகுமாரி யானாள். இதைக் கண்ணுற்ற பிதா, தன் பெண்ணுக் கேற்ற வரன் கிடைக்கவேண்டுமே யென்று கவலைப்பட்டு, விசாரித்துக்கொண்டிருந்தார்.

இச்சமயத்தில் ஹேமனாதுக்கு வியாபாரத்தில் மிகுந்த நஷ்டம் வரும்போலிருந்தது. அதினால் அவர் எண்ணிய தாவது:— 'நமக்கோ பெரிய திரவிய நஷ்டம் வருமென்று தோன்றுகிறது. இது பகிரங்கமாய் வெளியில் வருமுன், நம் அருமை மகளும், ஏக புத்திரியுமான கமலாவின் விவாகத்தை மிகச் சிறப்பாக நடத்திவிட வேண்டும்.' இப்படித் தீர்மானித்து, வியாகூலத்தை ஒருவாறு மனதில் அடக்கிக்கொண்டு, பெண்ணுக் கேற்ற வரனைத்தேட முயன்றார்.

தேடும்பொழுது, பாடலீபுரத்தில் சில வரன்கள் இருப்பதாகக் கேள்விப்பட்டு, அவ்வூருக்குப் போனார். அவ்வூரில்

ஒரு பாங்கியில் உதவி மானேஜரா யிருந்த கோகுல்சந்த் என்பவனுடைய மனைவி இறந்துபோய் விட்டதால், அவன் மறுவிவாகம் செய்துகொள்ளப் போவதாகக் கேள்விப்பட்டார். உடனே, ஹேமனாத், அந்த கோகுல்சந்தினுடைய வீட்டிற்குப் போனார். அவரைக் கண்டதும், கோகுல்சந்த் மிகுந்த மரியாதையுடன் வரவேற்றான். அவனுடைய வணக்கத்தையும், மரியாதைகளையும், குணங்களையும் கண்டு, ஹேமனாத், பின்வருமாறு எண்ணலானார். 'இவனுக்கோ வயது இருபத்தெட்டே ஆகிறது. தகுந்த உத்தியோகத்திலிருக்கிறான். முதல் தாரத்தினிடம் ஒரு குழந்தைகூடப் பிறக்கவில்லை; கண்ணுக்கு லக்ஷணமாயிருக்கிறான்; ஆகையால் என் அருமை மகளை இவனுக்கே கொடுத்துவிடலாம். இரண்டாந் தாரமா யிருந்தா லென்ன? கமலா யாதொரு குறையு மில்லாமல் சௌக்கியமா யிருப்பாள்.' இவ்வாறு தன்மனது திருப்தியானதினால், கோகுல்சந்தினிடம் தன் பெண்ணைப்பற்றிப் பிரஸ்தாபித்தார்.

அதற்கு கோகுல்சந்த் சம்மதித்து, 'நான் உம்முடன் புறப்பட்டுவந்து பெண்ணைப் பார்க்கிறேன். பிறகு விவாகத்தை நடத்திவிடலாம்' என்று சொல்லி, ஹேமனாத் கூடவே மதுராபுரிக்குப் புறப்பட்டுவிட்டான். இருவரும் மதுராபுரி போய்ச் சேர்ந்தார்கள். பெண்ணைப்பார்த்ததும், கோகுல்சந்திற்கு நிரம்பவும் திருப்தியாய் விட்டது.

கமலாவுக்கு, பாட்டு, படிப்பு முதலியவை தெரியும். பார்வைக்கு மிகுந்த வனப்பை யுடையவளாய், சகல லக்ஷணங்களும் பொருந்தியவளாய், பார்ப்பவர்க ளெல்லோரும் இவளே அதிரூபவதி என்று சொல்லும்படி யிருந்தாள். இவைகளை யெல்லாம் கண்டதும், கோகுல்சந்த், மனதில் மிகுந்த களிப்புற்று, அடுத்த முகூர்த்தத்திலேயே விவா

கத்தை நடத்திவிடவேண்டுமென்று ஹேமநாதிடம் ஏற்பாடு செய்துகொண்டு, ஊர் சென்றான்.

அடுத்த முகூர்த்தத்தில், கோகுல்சந்துக்கும் கமலாபாய்க்கும் மிகவும் சிறப்பாக விவாகம் நடந்தேறியது. அந்த தேசத்து வழக்கப்படி, கோகுல்சந்த், விவாகமானதும் கமலாபாயையும் கூட அழைத்துக்கொண்டு, பாடலீபுரம் போய்ச் சேர்ந்தான். பிறகு சில நாட்களுக்கெல்லாம் ஹேமநாதுக்குப் பலவிதத்திலும் திரவிய நஷ்டம் வந்துவிட்டமை, ஊர் முழுதும் தெரிந்துவிட்டது. ஹேமநாதோ, அவ்வளவு பெரிய பொருள்நஷ்டம் ஏற்பட்டுவிட்டதால், அதே ஏக்கமாய் மனம்நொந்து மயங்கி, ஒன்றும் தோன்றாதவராய், ஏக்கமுற்று நாளுக்குநாள் உடம்பு மெலிந்துபோய்க் கொண்டே யிருந்தார்.

கமலாபாய், தன் பர்த்தாவின் மனதுக் கிசைந்தவாறு நடந்துவந்தாள்; இருவரும் மனமொத்து, மிகுந்த குதூகலத்துடன் இல்லற சுகத்தி லிருந்தார்கள்.

இப்படி யிருக்கையில், நாட்கள், வாரங்கள், மாதங்களாகி, வருஷக் கணக்காகி விட்டன. விவாக முடிந்து எட்டு, ஒன்பது வருஷங்களாகி, மூன்று குழந்தைகளும் பிறந்து விட்டன. இப்படி இவர்கள் வாழ்ந்துவரும் நாளில், கோகுல்சந்துக்கு உக்ரமான ஜுரம் வந்துவிட்டது. உடனே கமலாபாய், பரபரப்போடு அவ்வூரில் பெரிய வைத்திய நிபுணரைக் கூப்பிட்டு வைத்தியம் செய்தாள். அந்த வைத்திய நிபுணர், மிகுந்த கவனத்தோடும் அக்கறையோடும் சிகிச்சை செய்தார். கோகுல்சந்துக்கு அந்த ஜுர நோய் அடுத்தடுத்து வந்ததினால், அந்த வைத்தியநிபுணர், மூன்றுமாதகாலம் விடாமல், தினந்திற்கு இரண்டு மூன்று முறை வருவதும், அவருக்குத் தகுந்தவாறு சிகிச்சை செய்வதுமாக விருந்தார்.

கமலாபாயின் ஒத்தாசைக்கு வீட்டில் பெரியவர்கள் ஒருவரும் இல்லாததினாலும், தன் புருஷனே தாபஜ்வரத்தால் வாதைப்பட்டுக்கொண்டு படுக்கையிலேயே இருந்ததினாலும், டாக்டர் சொல்லுவதைத் தானே கவனித்து, மருந்து, உண்டி முதலியவைகள் என்னென்ன விதம் கொடுக்கவேண்டுமோ, அவ்வவ்விதமாக மிகுந்த ஜாக்ரதையோடு செவ்வனே கொடுத்துக்கொண்டு வந்தாள்.

இது நிற்க, கோகுல்சந்திற்கு வைத்தியம்செய்த டாக்டரைப்பற்றிச் சிறிது சொல்லுவோம்.

இந்த டாக்டர் சசீந்திரர், சிறுவயதில் ஆதரிப்பாரின்றி, அனாதைச் சிறுவனாயிருந்தவர்; ஆனால், மிகுந்த சுறுசுறுப்பும், புத்திக் கூர்மை யுள்ளவராயு மிருந்தார். கமலாபாயின் பிதாவான ஹேமனாத் இதைகண்டு, இப்பையனைப் படிக்க வைத்தால் நன்றாக முன்னுக்கு வருவா னென்று, அப்பையனைக் கூட்டிக்கொண்டு வந்து, ஊண், உடை, முதலியன அளித்துப் படிக்கவைத்தார். இவரும் எல்லாவற்றிலும் முதன்மையாகத் தேறிக்கொண்டு வந்தார்.

ஹேமனாதுக்குப் பணநஷ்டம் வந்ததும், சசீந்திரர், வைத்தியகலாசாலையில் உபகாரச்சம்பளம் பெற்றுக்கொண்டு படித்து, அதிலும் முதன்மையாகத் தேறி, பாடலீபுரத்திலேயே பெரிய டாக்டர் ஆகி, இருபத்தெட்டு வயதிற்குள் மிகவும் பிரசித்தி பெற்றிருந்தார். இவ்வளவு பிரசித்தி பெற்று, நல்ல வரும்படி வந்துகொண்டு, யௌவன தசையிலிருந்தும், இவர் இன்னும் விவாகம் செய்துகொள்ளாமலேயிருந்தார். ஏனெனில், இந்த டாக்டர் சசீந்திரரைக் கமலாபாயின் தகப்பனாரான ஹேமனாத் சிறுவயதில் ஆதரித்து வந்தாரென்று முன்னமே கூறியிருக்கிறோமல்லவா; அந்தச் சமயத்தில், அடிக்கடி கமலாபாயைச் சந்தித்ததால், அவள் மேல் ஆசைகொண்டு, 'நான் எப்படியாவது சிரமப்பட்டு,

நன்றாகப்படித்து முன்னுக்கு வந்தால், கமலாபாயையே மணம்புரியலாம்.' என்று நினைத்து மனக்கோட்டை கட்டிக்கொண்டு, நன்றாகப் படித்து, எல்லா வகுப்புக்களிலும் முதன்மையாகத் தேறிக்கொண்டு வந்தார். தானெண்ணியபடி படிப்புக்களில் முதன்மையாக இருந்தும், பின்னால் எண்ணிய எண்ணம், (அதாவது, கமலாபாயை மணம்புரிவது) நிறைவேறாததினால், எல்லாவற்றிலும் ஒரு வித வெறுப்பை யடைந்து, இனிமேல் வேறு ஒரு பெண்ணையும் மணம்புரிவதில்லை யென்று தீர்மானித்துக்கொண்டு, ஒன்றிலும் ஆசைவையாமல், நிராசைதாரனாக விருந்தார். அப்படியிருந்தா ரென்றாலும், கமலாபாயின்மேல் கொண்ட ஆசையை மறக்க முடியவில்லை. அவளெண்ணம் வரும் பொழுது, மனசாக்ஷியானது, 'ஓ, மடமையே! பிறருக்கு மனைவியான பிறகு, அவளைக் கனவிலும் நினைக்கலாமோ? அப்படி நினைப்பது தர்ம விரோத மல்லவா? தவிர, வைத்தியத் தொழிலை அனுசரிப்பவர்கள், ஆண்களுக்குப்போலவே பெண்களுக்கும் வைத்தியம் செய்யவேண்டி யிருப்பதால், ஸ்திரீகளை யெல்லாம் கூடப் பிறந்த சகோதரிகளாகவும், தாயாகவும், மதிக்கவேண்டுமே யொழிய, வேறு விபக்தமாக எண்ணுவது, அத் தொழிலுக்கே ஒரு அகௌரவம் அல்லவா?' என்று வாதிக்கும். அவர் அதற்கு, 'நான் முந்தியே எண்ணின எண்ணத்தை மாற்ற முடியவில்லையே, என் அந்தரங்கத்தை வெளியிடாமல், இரகசியமாக வைத்துக் கொண்டிருந்தால், என்ன தப்பிதம்? ஒருவருக்கு துரோகம் செய்தால்தானே தப்பு?' என்று, தன் மனதைச் சமாதானப் படுத்திக்கொள்ளுவார். இப்படியாக அவருடைய மனம் சஞ்சலப்பட்டுக்கொண் டிருக்கும்பொழுது தான், யதேச்சையாக, கோகுல்சந்திற்கு வைத்தியம் செய்வதற்கு வந்து சேர்ந்தார்.

கமலாபாயின்மேல் தனக்கிருந்த எல்லையற்ற அன்பினால், அவளை, இந்த விதத்திலாவது திருப்திசெய்ய வேண்டுமென்று நினைத்து, தான்கற்ற வைத்திய சாஸ்திரத்தை மிகுந்த ஜாக்கிரதையோடு உபயோகித்து, கோகுல்சந்திற்கு வைத்யம்செய்தார்.

அவர் உட்கருத்தை அறியாத கமலாபாய், இந்த சசிந்திரர், தன் கணவனுக்கு வைத்தியம் செய்வதி லுள்ள அக்கறையை மதித்து, அவரிடம் மிகுந்த நன்றி பாராட்டினாள். தவிர, தன் பர்த்தாவின், வைத்தியங்களுக்காக அவரிடம் அடிக்கடி பேசிக்கொண் டிருந்ததினாலும், சிறுவயதிலேயே அவரைத் தெரியு மாதலினாலும், தன் பர்த்தாவின் வியாதிக்கு இவ்வளவு சிரத்தையோடு வைத்தியம் செய்தாரே யென்ற விசுவாசத்தினாலும், அவரை ஓர் அன்னியனாகப் பாவிக்காமல், தன் சகோதரன்போல் பாவித்து, கிஞ்சித்தும் வேற்றுமை பாராட்டாமல், அவருடன் தாராளமாய்ப் பேசிக்கொண்டு வந்தாள்.

டாக்டர் சசிந்திரரின் வைத்தியத்தால், கோகுல்சந்த் உடம்பு கொஞ்சங் கொஞ்சமாய்க் குணமடைந்தது என்றாலும், மிகவும் பலஹீனமா யிருந்ததினால், டாக்டர், அவரை ஏதாவது குளிர்ச்சியான தேசத்திற்கு அழைத்துப்போய், சிரமபரிகாரமாகச் சில நாட்கள் தங்கியிருந்துவிட்டு வந்தால், உடம்பு சீக்கிரத்தில் தேறிவிடு மென்றும், இடம் மாறி வேறு இடம் போனாலே, தேகத்திற்கு நல்லதென்றும், சொன்னார்.

டாக்டர் என்னசொல்லியும், கோகுல்சந்த், அதைப் பற்றிச் சிந்திக்கவே யில்லை. கமலாபாயோ, 'கணவனுடைய உடம்பு கெட்டுப்போய்விடுமே, வேறு ஊர் போகாம லிருக்கிறாரே, என்ன செய்வோம்?' என்று, மிகுந்த கவலையோடு தன் கணவனிடம்போய், 'நாதா, ஏன் தாங்கள் டாக்

டர் சொன்னதில் சிரத்தை யெடுத்துக்கொள்ள வில்லை. உடம்பு மிகவும் பலஹீனமா யிருப்பதால், தாங்கள் தாமதிப்பது உசித மல்ல. ஏதாவதோர் மலைப்பிரதேசத்திற்குப்போக, உடனே ஏற்பாடு செய்யுங்கள்,' என்று, விநயமாக உரைத்தாள்.

அதற்கு, கோகுல்சந்த், 'நீ ஒன்றும் தெரியாமற் பேசுகிறாய். நாம் போகவேண்டு மென்றால் இலக்ஷ்மி யிருக்கிறதா? 500-ரூ. வேண்டுமே; என் கையில் 500 தம்பிடி கூட இல்லை; கடன் வாங்குவதில் எனக்கு இஷ்ட மில்லை. அதனால், நான் ஓடரித்திற்கும் போகப்போவ தில்லை' என்று, கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டான்.

இதைக் கேட்ட கமலா, கவலையுற்றுத் தனிமையில். 'நம் புருஷனே கடன் வாங்க மறுத்துவிட்டார். நாமாவது கொடுப்போ மென்றால் நம் கையிலும் பண மில்லை; தகப்பனாரைக் கேட்போ மென்றால், அவர் மரண தறுவாயி லிருக்கிறார். தகப்பனார் உடம்பைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கும் சமயத்தில், கணவனுக்காக வேறு ஊர் போக வேண்டியிருக்கிறது. நாம் போகாம லிருந்தாலோ, பிராணநாதனின் உடம்பு கெட்டுப்போய்விடும்; இதற்கேதாவது உபாயம் நாமாகத் தேடவேண்டும்,' என்று சிந்தித்துக் கொண்டிருக்கும்பொழுது, அவளுக்கு ஓரெண்ணம் உதித்தது. 'யாரிடமாவது, கடன் வாங்கி நம் கணவனுக்குக் கொடுத்து விட்டால், எப்படியாவது பிறகு வேலை செய்து கடனைத் தீர்த்துவிடலாம்' என்று எண்ணி, தன் கணவனின் கீழ் பாங்கியில் குமாஸ்தா வேலை பார்க்கும் கிறிஸ்துவமதத்தைச் சேர்ந்தவனான 'வில்லியம்ஸ், என்பவனிடம் போய்க் கடன் கேட்டாள்,

அதற்கு அவன், 'கடன் கொடுப்பதில் ஆக்ஷேபணையில்லை; ஆனால் கடன் பத்திரத்தில் ஜவாப்தாரியாக

யாராகிலு மொருவர் கையெழுத்துப் போடவேண்டும்' என்று சொல்லிவிட்டான்.

கமலா:—'சரி' என்று சொல்லிவிட்டு வீட்டிற்கு வந்தாள்; வந்ததும், மிகுந்த கவலையுடன், கையெழுத்துப்போடுவதற்கு யாரைக் கூப்பிடுவது என்று, சிந்தித்துக்கொண்டிருந்தாள். அச்சமயத்தில் தகப்பனார் இறந்து போய் விட்டாரென்ற சமாசாரம் வந்தது. தகப்பனார் இறந்து போன துக்கத்தினால் இரண்டு மூன்று நாட்கள் ஒன்றுமே தோன்றாதவளா யிருந்தாள். பிறகு, தன் கணவனின் நிலைமை ஞாபகத்திற்கு வர, 'ஐயோ, நாம் பேசாமலிருக்கிறோமே! இனிமேல் தாமதிக்கக் கூடாது. கூடிய சீக்கிரத்தில் பணத்திற்கு ஏற்பாடு செய்யவேண்டும், இதற்கென்ன செய்யலாம்?' என்று யோசித்து, கடைசியில் ஒரு விதமான முடிவுக்கு வந்தாள்.

அதென்னவெனில், 'நம் தகப்பனார் இறந்து போனது அந்த வில்லியம்ஸுக்கு எப்படித் தெரியும்? தெரியாது; அதனால், நம் தகப்பனாரின் கையெழுத்தை நாமே போட்டு விடுவோம்' என்று தீர்மானித்துக்கொண்டு, அந்தப் பிரகாரமே, கடன் பத்திரம் தயாரித்து, தன் கையெழுத்தை ஒரு தேதியில் போட்டு, இரண்டு, மூன்று நாட்கள் கழித்து, தன்னுடைய தகப்பனார் கையெழுத்தைப் போல அத்தேதியில் போட்டு, 'வில்லியம்ஸ்' என்பவனிடம் அப்பத்திரத்தைக் கொடுத்து, ரூபாய் 500 பெற்றுக் கொண்டு வந்து விட்டாள்.

தன் கணவனிடம் போய் அப்பணத்தைக் கொடுத்து, தனக்கு அப்பணம் தகப்பனார் கொடுத்ததாகவும், அதை யெடுத்துக்கொண்டு மலைவாசம் போகலா மென்றும், சொன்

ஞன். அதற்கு கோகுல்சந்த் சம்மதித்து, மலைப் பிரதேசத்திற்குப் போய், அவ்விடம் இரண்டு மூன்று மாதம் வசித்து விட்டு வருகிறதென்று தீர்மானித்துக் கொண்டு, புறப்பட்டுப் போனூர்கள்.

இவர்கள் புறப்பட்ட சில நாட்களுக் கெல்லாம், கமலாபாயின் தகப்பனுர் இறந்துபோய் விட்டாரென்பதை வில்லியம்ஸ் அறிந்தான்.

'இதென்ன? ஹேமனுத் இறந்துபோயிருக்க, பத்திரத்தில் அவருடைய கையெழுத்து எப்படி வந்தது?' என்று ஆலோசித்து, உண்மை தெரிவதற்காக அதைத் தீர விசாரித்தான். அப்படி விசாரித்ததில், தன் பத்திரத்தில் போட்டிருக்கும் கையெழுத்து, அவர் இறந்து போய் ஒரு வாரத்திற்குப் பிற்பட்டதா யிருந்ததால், அது மோசக் கையெழுத்தென்பதை அறிந்தான். 'சரி, நம் பணத்திற்கு மோசமில்லை; நம் கையிலும் ஒரு பிடிப்பு அகப்பட்டுவிட்டது' என்று, சந்தோஷத்தோடிருந்தான்.

இது இப்படி யிருக்க, கோகுல்சந்துக்கு அவ்வூர் போனதும், உடம்பு நன்ருகத் தேறிவிட்டது; நன்ருகச் சுகவாசம் செய்துவிட்டுத் திரும்பி வந்தார்கள். இவர்கள் திரும்பி வந்த சில தினங்களுக்குள், ஒரு நல்ல சமாசாரம் தெரிய வந்தது.

அதென்ன வெனில், அந்த பாங்கியின் முதலாளிக ளெல்லாம் சேர்ந்து, கோகுல் சந்தை, உதவி மானேஜரி லிருந்து, மானேஜராகவே தேர்ந்தெடுத்தார்கள். அதனுல் கோகுல் சந்த், அந்த பாங்கியில் சர்வாதிகாரமும் பெற்று விளங்கிஞன். இந்த சந்தோஷத்தில் சில நாட்கள் சென்றன. பிறகு, கமலாபாய், 'நாமென்ன பேசாமலிருக்கிறேம்? கடனைத் தீர்க்க ஏதாவது ஏற்பாடு செய்யவேண்டும்!' என்று,

அதிகக் கவலையோடு, அதற்காகப் பிரயத்தனம் செய்ய முயன்றாள்.

தன் செலவுக்காகத் தன் கணவன் கொடுக்கும் பணத்தில் மிச்சம் பிடித்தும், நூல் வேலைகள் முதலியன செய்து, ஸ்திரீகள் செய்த வேலைப்பாடுகளை விற்கும் இடத்திற்கு அனுப்பி விற்றும், பணம் சேர்த்தாளென்றாலும், அப்பணம், தான் வாங்கின தொகையின் வட்டிக்குத் தான் போதுமானதாயிருந்தது.

இது நிற்க, டாக்டர் சசீந்திரரின்மேல் கோகுல்சந்துக்கும் மிகுந்த விசுவாசம் உண்டாகிவிட்டது. அடிக்கடி சசீந்திரர் இவர்கள் வீட்டுக்கு வருவதும் போவதுமாயிருந்தார். முக்கால்வாசி நாட்கள், கோகுலசந்த் வீட்டிலேயே, சாப்பாடு, சிற்றுண்டிகள் முதலியன செய்வார். இப்படி இவர்கள் அத்யந்த சிநேகிதர்களாகிவிட்டார்கள்.

இப்படி ஒரு வருஷகாலம் சென்றது. ஒரு நாள் கமலாபாய், குழந்தையை வைத்துக் கொஞ்சிக்கொண்டிருக்கும் வேளையில், அவளுடைய பாலிய சிநேகிதியும், பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படித்தவளுமான, கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்த லூஸி என்பவள், தன் சிநேகிதியான கமலாபாய் இருக்குமிடம் விசாரித்துக் கொண்டு, வந்து சேர்ந்தாள். அவளைக் கண்டதும், கமலா, மிகுந்த சந்தோஷத்தோடு வரவேற்று, உபசரித்தாள். இருவரும் ஒருவரையொருவர் யோகக்ஷேமம் விசாரித்துக் கொண்டார்கள்.

கமலா.—என்ன, லூஸி, என் சமாச்சாரத்தையே சொல்லிக்கொண்டிருக்கிறேனே. உன்னைப் பற்றிக் கேட்கவேயில்லையே. சில நாட்களுக்கு முன்பு தான் உன்னுடைய கணவன் இறந்துபோய் விட்டதாகக் கேள்விப்பட்டேன். ஐயோ, பாவம், உன் விஷயத்தில் கடவுள்

சோதித்துவிட்டார். என்ன செய்யலாம், சாப்பாட்டுக்கு ஏதாகிலும் சொத்து இருக்கிறதா?

ஊாஸி:—எனக்குக் கைம்பெண் ஜன்மம் வந்துவிட்டது. விதியை வெல்வதற்கு யாரால் முடியும்? என் தம்பிகள் இருவரையும், வியாதிக்காரத் தாயாரையும் காப்பாற்ற, என்னைத் தவிர வேறு ஒருவரும் இல்லாததினாலும், என் தகப்பனார் ஆஸ்தி ஒன்றுமே யில்லாததினாலும், அவர்களைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு என்னுடைய தாகிவிட்டது. இராப் பகலாய் வேலை செய்தும் போதுமான பணம் என்னால் சம்பாதிக்க முடியாமற் போய்விட்டது. அதற்காக சீக்கிரத்திலேயே 100 ரூபாய் சம்பளத்திலிருந்த ஒருவரை விவாகம் செய்துகொண்டேன். நான் விவாகம் செய்துகொண்ட இரண்டு, மூன்று வருடங்களுக்கெல்லாம் என் தாயார் பரமபதவி யடைந்துவிட்டாள். இப்பொழுது என் தம்பிகளும் தாம் தாம் சம்பாதிக்க ஆரம்பித்து விட்டார்கள். எனக்குக் குழந்தைகள் ஒன்றும் பிறக்கவே யில்லை. என் புருஷனும் காலமாயினார். இப்பொழுது நான் ஒருத்தி தான். ஆஸ்தி ஒன்று மில்லை. என் கணவருடைய சம்பாத்தியம் எங்களுடைய செலவுக்குத் தான் சரியாயிருந்தது. இனிமேல், நான் தானே சம்பாதித்துச் சாப்பிட வேண்டியதைத் தவிர வேறு வழி ஒன்று மில்லை. உன்னுடைய கணவர், இவ்வூர் பாங்கியில் மானேஜராக இருக்கிறாரென்று கேள்விப்பட்டதினால், உன் மூலமாகச் சிபார்சு செய்து கொண்டு, டைப்ரைட்டிங் வேலையிலாவது, வேறு ஏதாவது ஒரு வேலையாவது பார்க்கலாமென்று வந்தேன். நீ எப்படியாவது உன் கணவரிடம் சொல்லி, எனக்கு ஒத்தாசை செய்ய வேண்டும்.

இப்படி இவர்கள், பேசிக்கொண்டிருக்கும் சமயத்தில், கோகுல்சந்த், "என் அருமைக் கமலாக் குட்டி!" என்று கூப்பிட்டுக்கொண்டு வந்தார். (இவர், அருமையாகத் தன் மனைவியை, குட்டி, குஞ்சு, என்று தான் அழைப்பது வழக்கம்.)

உடனே கமலா எழுந்து எதிர் கொண்டு போய், "நீங்கள் தயவு செய்து இவ்விடம் வரவேண்டும்" என்று கூட்டிக்கொண்டு வந்து, ஒரு நாற்காலியில் உட்காரச் சொல்லி, தன் தோழியைப் பற்றிய சமாசாரத்தை விளங்க வுரைத்து, "நீங்கள் தயவு செய்து, எனக்காக இவளுக்கு ஏதாவதொருவேலை கட்டாயம் செய்து கொடுக்கவேண்டும்" என்று சிபார்சு செய்தாள்.

கோகுல்சந்த்:—(லூஸியை நோக்கி) "ஏனம்மா, நீங்கள் இதற்கு முன் வேறு எங்காவது வேலையிலிருந்ததுண்டா?" என்று கேட்டார்.

லூஸி:—ஆம், ஐயா, ஜப்பல்புரியில் ஒரு அச்சாபீஸில் வேலையிலிருந்தேன். அவ்வூர் என் உடம்புக்கு ஒத்துக் கொள்ளாததினால், வேலையை ராஜினமா செய்து விட்டு வந்தேன். தாங்கள் ஏதாவது வேலை கொடுத்தால், தங்கள் பெயரைச் சொல்லிக்கொண்டு காலம் கழிப்பேன்.

கோகுல்:— ஓகோ, நல்லது தான், நீங்கள் முன்னால் வேலையிலிருந்ததினால், மிகச் சுலபமாக வேலை பண்ணி வைக்க முடியும். இப்பொழுது ஒரு வேலை காலியாகப் போகிறது. அதைத் தங்களுக்குச் செய்து வைத்து விடுகிறேன்" என்று சொல்லி, அவளுக்கு ஜாகை முதலியன தேடிக் கொடுத்தும், புருஷன், மனைவி, இருவர்களும், அவளுக்கு வேண்டிய ஒத்தாசை செய்தார்கள்.

னாலிக்கு வேலையும் ஆகிவிட்டது. அவள் இவர்களிடமிருந்த அன்பு பாராட்டி, அடிக்கடி கமலாவின் வீட்டிற்கு வந்து, அவளுக்கு எந்த வேலையிலும் ஒத்தாசை செய்து கொண்டிருந்தாள். இவர்களுடைய சிநேகம், தினே தினே, விருத்தியாயிற்று. பழைய பாலிய சிநேகமாகையால், இப்பொழுது அவர்களுடைய சிநேகம் விரைவில் விருத்தியடைந்து, மிகுந்த நட்புரிமையா யிருந்தார்கள்.

இப்படியிருக்கையில் ஒருநாள், நூல் வேலை செய்து கொண்டு கமலா தன் அறையில் உட்கார்ந்திருந்த பொழுது, வில்லியம்ஸ் திடீரென வந்து தோன்றினான். உடனே கமலா, அவனை நோக்கி, "என்ன காரணம்? நீ பணத்திற்காக இவ்விடம் வர வேண்டாம். நான் செலுத்தி விடுகிறேன் என்று சொன்னேனே, ஏன் வந்தாய்?" என்று கேட்டாள்.

வில்லியம்ஸ்:—அம்மா, நான் பணம் கேட்பதற்காக வரவில்லை. உங்களுடைய கணவர் என்னை வேலையிலிருந்து நீக்கி விட்டார், தாங்கள் எப்படியாவது அவரிடம் சொல்லி, என் வேலையை எனக்கே கொடுக்கும்படி செய்ய வேண்டும்.

கமலா:—கச்சேரி விஷயமான சமாசாரங்களொன்றும் நான் அவரிடம் சொல்வதில்லை. அவ்விஷயங்களில் நான் தலையிட்டுக் கொள்ள மாட்டேன். எனக்கு அவ்விஷயங்களில் என்ன தெரியும்?

வில்லியம்ஸ்:—நீங்கள் கட்டாயம் சொல்லத்தான் வேண்டும். இல்லாத போனால், உங்களுக்குக் கெடுதி சம்பவிக்கும். எப்படியெனில், நீங்கள் என்னிடம் கொடுத்திருக்கும் கடன் பத்திரத்தில் மோசக்கையெழுத்து இருப்பதால், உங்கள் மேல் சட்டப்படி விவகாரம் தொடங்குவேன். அது வெகு பிரமாதமாக முடியும்.

கமலா:—ஓஹோ! இப்படி யெல்லாம் சொல்லி என்னைப் பயமுறுத்தலா மென்று பார்க்கிருயோ! ஆம், கள்ளக் கையெழுத்துத் தான், நான் தான் என் தகப்பனுர் கை யெழுத்தைப் போட்டேன்; உனக்குப் பணம் தானே சேர வேண்டும்? நான் உன் பணத்தை மோசம் செய் யாமல் கொடுத்து விட்டால், சரிதானே? கையெழுத்து எப்படி இருந்தாலென்ன? சட்டமாவது, கிட்டமாவது, எனக்கொன்றும் பய மில்லை. உன்னுலானதைச் செய்து கொள். நான் நல்ல விஷயத்திற்காகத் தானே செய் தேன்? நல்லதிற்காக ஒரு காரியம் செய்யும் பொழுது, சட்டம் என்ன செய்ய முடியும்? சரி; என்ருலும் என் கணவரிடம் உன்னைப் பற்றிச் சொல்லுகிறேன். நீ வந்ததை அவர் அறியு முன், இவ்விடம் விட்டுப் போய் விடு.

வில்லியம்ஸ், உடனே போவதற்குப் புறப்பட்டான். இவன் ஒரு வாசல் வழியாகப் போகும் பொழுது, மற் ருெரு வாசல் வழியாக, கோகுல்சந்த் உள்ளே நுழைந்தார். உட்புகுந்ததும், கமலாவைக் கூப்பிட்டு, 'இப்பொழுது யார் இங்கு வந்து விட்டுப் போனது' என்று கேட்டார். அதற் கவள் 'ஒருவரு மில்லையே' என்று மெதுவாகச் சொன்னுள்.

கோகுல்:—"ஒருவரு மில்லையா? இதென்ன வேடிக்கையா யிருக்கிறது. நம்வாசல் வழியாக வில்லியம்ஸ் போய்க் கொண்டிருந்தானே," என்ருன்.

கமலா:—(சற்றுத்தியங்கிய பிறகு) "ஆம், இங்கு வில்லியம்ஸ் வந்திருந்தான். நீங்கள் அவனை வேலையிலிருந்து நீக்கி விட்டீர்களாம்; அதனுல், அவன், என்னிடம் வந்து, தனக்கு அந்த வேலையை எப்படியாவது திருப்பிக் கொடுக்கும்படி தங்களிடம் சொல்லவேண்டும் என்ருன்.

பாவம், ஏன் அவனை வேலையிலிருந்து நீக்கிவிட்டீர்கள்?" என்று கேட்டாள். இவள் சொன்னதைக் கேட்டதும், தனக்குள், 'இதென்ன, இவள் இதுவரை ஒருபோதும் பேச்சு மாற்றினதில்லையே? முதலில் ஒருவரும் வரவில்லையென்றாள். நாம் கேட்ட பிறகு வந்தானென்றாள்' என்று மனதிலெண்ணிக் கொண்டு: "கமலா, நீயேன் இதிலெல்லாம் பிரவேசிக்கிறாய்? அவன் மகா மோசக்காரன். தப்புப் பத்திரம் தயாரித்து, மோசக் கையெழுத்துப் போட்டு, பணத்தை அபகரிக்கப் பார்த்தான் அதனால் தான் அவனை வேலையிலிருந்து நீக்கி விட்டேன்." என்றார். உடனே அவள் தியங்கி, "தப்புக் கையெழுத்துப் போடுவது அவ்வளவு பெரிய குற்றமா?" என்று, மிகுந்த பயத்தோடு கேட்டாள்.

கோகுல்:—ஆமாம், வெகு பெரிய குற்றந்தான் அது. இவைகளெல்லாம், பொய், பித்தலாட்டங்கள் செய்கிற தாய் வழியாகத் தான் வருகிறது.

கமலா:—ஏன், தாய் வழியாக வரக்காரணம் என்ன?

கோகுல்:—ஏனெனில், குழந்தைகளை அவர்களுக்குச் சரியானவழியில் பயிற்றுவிக்கத் தெரிவதில்லை. அவர்களே பொய், பித்தலாட்டங்கள் செய்வதைச் சிறுவர்கள் பார்ப்பதால், அதே அவர்களுக்கும் அப்பியாசமாகிறது" என்று சொல்லிச் சரமாரியாகப் பிரசங்கம் செய்து கொண்டே போனார்.

கமலா:—(அதைக் கேட்டு, சற்று நேரம் திகைத்திருந்துவிட்டு) நாதா, எனக்கு அவனைப் பார்த்தால் பயமாயிருக்கிறது. நமக்கு ஏதோ கெடுதி செய்வான் போலத் தோன்றுகிறது. அதனால் தாங்கள் தயவு செய்து அவனுடைய வேலையை அவனுக்கே கொடுத்து விடும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

கோகுல்:—கமலாக்குட்டி என்பதற்கேற்றாப் போல் பயப்படு கிறாயே. நமக்காவது, அவன் கெடுதி செய்யவாவது, ஒருக்காலும் முடியாது. அவன் கிடக்கிறான், மோசக் காரன். நீ வன் வீணாகப் பயப் பட்டு, அதில் கவலை யெடுத்துக் கொள்ளுகிறாய். பேசாமலிரு.

கமலா:—நாதா: அவனைப் பார்த்ததிலிருந்து கெடுதி செய் வான் போலவே தோன்றுகிறது; அதனால் தாங்கள், தயவு செய்ய வேண்டும்.

கோகுல்:—என் கமலாக்குஞ்சே, நீ சொல்லியபடி அவனுக்கு வேலையைக் கொடுக்க முடியாது. அந்த வேலையைத் தான் லூஸிக்குக் கொடுத்திருக்கிறேன். நீ அதைப் பற்றி ஒன்றும் பயப்பட வேண்டாம். நான் இருக்கும் பொழுது, உனக்கென்ன பயம்?" என்று சொல்லி, அவளைக் குஷால் படுத்தினான். ஆயினும் அவள் பேசாம லிருந்தாளே யொழிய, மனதில் அதே சிந்தனையாக விருந்தாள். கோகுல்சந்த் வெளியில் போனதும், இவள் தனிமையில் சிந்திக்கலாயினாள்.

'ஆஹா, நானும் ஒரு பெரிய தப்பிதம் செய்துவிட் டேனே! நல்லது செய்கிறேனென்று நினைத்து ஒரு பெரிய குற்றத்தைச் செய்து விட்டேனே! கணவர் சொன்னதி லிருந்து, எனக்கும் குழந்தைகளைப் பயிற்றுவிக்க யோக் யதை யில்லை யென்று தெரிகிறது. இது நிஜமாயிருக்கக் கூடுமா?' இந்த எண்ணமே அவளுடைய மனதில் ஊசலாடிக் கொண்டிருந்தது. தவிர, 'கணவருக்கு நல்லது செய்ய வேண்டு மென்று செய்யப் போனதினால் தானே இவ்வளவு பெரிய குற்றம் வந்து விட்டது. என்ன செய்யலாம்?' இச் செய்தியை அவரிடமே சொல்லி விடலாமா?' என்றும் எண்ணினாள். ஆனால் அவளுக்குச் சொல்வதற்குத் தைரிய

மெழு வில்லை. இன்னது செய்வதெனத் தெரியாது தியங்கினாள்.

தம்பதிகள் இவர்களிருவரும் பிரியமாயிருந்தும், ஏன் அன்னியோன்யம் பிறக்க வில்லை யென்று இதனைப் படிப்போர் கேட்கலாம். இதற்குக் காரண மென்ன வெனில்:— கமலா விவாகமாகி வீட்டிற்கு வரும் பொழுது பதினைந்து வயதே யானதினாலும், வீட்டில் வேறு ஒருவரு மில்லாததினாலும், கோகுல்சந்திற்கு வயது இருபத் தெட்டாகிவிட்டதினாலும், இருவருக்கும் வயது வித்தியாசம் மிகுந்திருந்ததினாலும், அவன், தன் மனைவி சிறியவள், இவள் எப்படி வீட்டுக் காரியங்களை நிர்வகிப்பாள், ஒன்றுமே அறியாள் என்று, தானே சகலமும் பார்த்துக் கொண்டு வந்தான். வீட்டிற்கு வேண்டிய பெரிய சாமான்கள் யாவும் வாங்கிப் போட்டு விடுவான். கமலாவுக்கு வேண்டிய, புடவைகளோ, சட்டைகளோ, துணிகளோ யாவும், இவள் சொல்லி வாய் மூடு முன் வாங்கிக் கொடுத்து விடுவான். இவள் கையில் ஏதாவது சில்லறைச் செலவுக் கென்று கொஞ்சம் பணம் தான் கொடுப்பான்; ஜாஸ்தியாகக் கொடுப்பதே யில்லை. தன் புருஷனுக்கு எவ்வளவு வரும்படி வருகிறது, எவ்வளவு செலவாகிறது, என்கிற விஷயத்தில், இவள் கிஞ்சித்தும் அறிந்தா ளில்லை. வந்த புதிது முதல், இவர்களிருவருக்கும் மேற்பட்ட வயது வித்தியாசத்தால், யாவற்றையும் தானே மேற் போட்டுக் கொண்டு செய்தா னென்று சொன்னோமல்லவா; அதே வாடிக்கையாக, இவனே யாவற்றையும் பார்த்துக் கொண்டு வந்தான். அதினால், இவள் பணவிஷயமாகவோ, மற் றெவ்விதமான விஷயங்களிலோ, யாதொரு ஜோலியிலும், இது வரையில் பிரவேசிக்காம லிருந்ததினால், இப்பொழுது எப்படிக் கேட்கிறது என்று தியங்கினாள். மேற்கூறியவாறு கமலாம்பாள் மாத்திர மல்ல, இப்பொழு

தும் அனேக ஸ்திரீகள் புருஷனுக்கு வருகிற வரும்படிக்கு மேல் படாடோபமாகச் செலவு செய்து விட்டு, பிறகு மிகுந்த கஷ்டத்திற் குள்ளாகிறார்கள்.

இது நிற்க: கமலாவானவள், இறுதியில ஒரு விதம் தீர்மானித்தாள். 'இதை நம் கணவனிடம் சொல்லாமலேயே, கடனைத் தீர்க்க வேறு ஏதாகிலும் உபாயம் தேட வேண்டும்' என்று நினைத்தாள். அப்பொழுது, அவள் மனதில் ஓர் உபாயம் தோன்றிற்று. அதாவது, டாக்டர் சசீந்திரர் அடிக் கடி வந்து போய்க் கொண்டு, அன்னியோன்ய பந்து போல் இருக்கிறாரே; அவரைக் கேட்டுக் கடன் வாங்கி, அந்தக் கல் நெஞ்சனிடம் கொடுத்து விட்டால், பிறகு டாக்டருக்கு மெதுவாகக் கொடுக்கலா மென்று நிச்சயித்துக் கொண்டாள்; என்றாலும் அவள் மனம் முன்போ லல்லாமல், மிகுந்த வியாகூலத் தோடிருந்தது. கோகுல்சந்த், தன் மனைவி எப் பொழுதும் நல்ல ஆடை யாபரணங்களால் அலங்கரித்துக் கொண்டிருக்க வேண்டு மென்று விருப்பம் கொண்டவன். அன்றியும், இவ்வளவு ரூபவதியான மனைவியை அடைந் திருக்கிறோம் என்கிற அகம்பாவமு முள்ளவன். அவன், தன் மனைவி கமலாவுக்கு, நல்ல பகட்டான துணிமணிகள் தான் வாங்கிக் கொடுப்பான். அவன் வாங்கிக் கொடுப்பதால் அவளுக்கு அதே வாடிக்கை யாகி விட்டது. வெளியில் எங்கு சென்றாலும், நல்ல பகட்டான ஆடை யாபரணங்களே அணிவாள். இப்பொழுது, இந்த மாதிரியான மனக் கலக்கம் வந்ததே முதல், ஒன்றிலும் ஆசை வையாம லிருந்தாள். இதை யறியாத கோகுல்சந்த், "என்ன, கமலா, இரண்டு, மூன்று நாட்களாக ஒரு மாதிரி இருக்கிறாயே? வீட்டிற் குள்ளேயே யிருப்பதால், இப்படி இருக்கிறாயோ? நாம் இன்று மாலை தமாஷாக வெளியில் போய்விட்டு வரலாம். மாலையில் தயாராக விரு; நான் இப்பொழுது வேறு

வேலையாக வெளியிற் செல்லுகிறேன். சரியாக ஐந்து மணிக்கு வந்து விடுகிறேன்?" என்று சொல்லிவிட்டுப் போனான்.

கமலா, தயாரானதும், மணியைப் பார்த்தாள். மூன்று தான் ஆயிருந்தது. இன்னும் இரண்டுமணி நேரம் இருக்கிறதே, சிறிது நேரம் வீணை வாசிப்போமென்று, வீணையைக் கையிலேந்தி வாசித்துக்கொண்டிருந்தாள். அச் சமயத்தில் டாக்டர் சசீந்திரர் வந்தார். உடனே கமலா எழுந்து, அவருக்கு ஒரு நாற்காலி போட்டு, "வாருங்கள், இப்படி உட்கார்ந்திருங்கள். தம்முடைய நண்பர் இன்னும் சிறிது நேரத்தில் வந்துவிடுவர்?' என்று சொன்னாள். சற்று நேரம் பொறுத்து, பின் வரும் சம்பாஷணை நடந்தது:—

சசீந்திரர்:—அம்மா, தாங்களேன் இம்மாதிரி பகட்டான ஆடையாபரணாதிகள் அணியவேண்டும்? இம்மாதிரியான பகட்டு சாமான்களையும், அலங்காரங்களையும், நான் வெறுக்கிறேன். இயற்கையிலேயே அழகாயிருக்கிறவர்களுக்கு இவ்விதமான ஆடை யாபரணாதிகள் எதற்கு? சாதாரணமான உடை, அணி, முதலியன அணிந்தால் தான், சுய அழகு பிரகாசிக்கும்.

கமலா:—தமது நண்பருக்கு இவைகளில் தான் இஷ்டம். அதினால் தான் இப்படி அலங்கரித்துக் கொள்ளுகிறேன்.

இன்னும் பலவிதமாக இவர்கள் சம்பாஷித்துக்கொண்டிருக்கையில், கமலா, பணம் கேட்பதற்கு இதுதான் சரியான சமயமென்று நினைத்து, கேட்கலானாள்.

கமலா:—டாக்டர், உங்களால் எனக்கொரு காரியம ஆக வேண்டியிருக்கிறது. அக் காரியத்தை என் கணவரிடம் சொன்னால் அவரும் செய்வார்; நிச்சயமாகச்

செய்வார். என்றாலும், அதை நீங்கள் செய்தால் எனக்கு மிகவும் சௌகரியமாயிருக்கும். தயவு செய்து நீங்கள் செய்வீர்களா?

ாக்டர்:—ஆகா, நீங்கள் சொன்னால் அதைச் செய்வதற்குத் தயாராகக் காத்துக்கொண்டிருக்கிறேன். கோகுல் சந்த் தான் உங்களுக்கு அதிசயமாகச் செய்கிறாரென்று, எண்ணிக்கொண்டிருக்கிறீர்களோ! இப்படிப்பட்ட பத்தினியை அடைந்திருப்பவன் எவ்வளவோ பூஜாபலம் பண்ணியிருக்க வேண்டும். அவனது பாக்யமே பாக்யம். இதற்கு மேல் எவ்வளவோ பெயர்கள் செய்வார்கள்.

கமலா:—(வெறுப்புடன்,) நீர் இவ்விதம் பேசுவது நன்றாயில்லை. இதன் கருத்தென்ன? நான் உம்மிடம் ஒன்றும் சொல்லவில்லை. சொன்னதினால் தானே இப்படியெல்லாம் பேசுகிறீர். இனிமேல் என்னோடு பேச வேண்டாம்.

டாக்டர்:—அம்மா, தங்களெதிரில் பேசுவது இது தான் கடைசித் தடவை. இந்த நிர்ப்பாக்கியனைத் தாங்கள் இனிமேல் எப்பொழுதும் பார்க்கும்படி நேரிடாது. எனக்கு அந்திய காலம் நெருங்கிவிட்டது. நீங்கள் ஏதோ காரியம் செய்ய வேண்டுமென்று சொன்னீர்களே. நீங்கள் தெரிவித்தால் அதை எப்படியாவது செய்துவிட்டுச் செல்லுகிறேன். தங்களுக்காக, என் உடல், பொருள், ஆவி, எல்லாவற்றையும் கொடுத்துவிடச் சித்தமாயிருக்கிறேன்.

கமலா:—தாங்கள் இப்படியெல்லாம் சொல்லுவதின் அர்த்தமென்ன? அதற்குள் அந்திய காலம் நேரிட்டுவிட்டதென்று சொல்லுவதின் தாத்பரியம் என்ன? அவைகளையெல்லாம் சற்று விளக்கவுரைப்பீரா?

சசீந்திரர்:—அம்மா, நான் காலகதி படையாமல் இவ்வளவு நாட்கள் என்னைக் காப்பாற்றியது தங்கள் முக தரிசனமே. ஏனென்றால், நான் மிகுந்த ப்ரிதாப நிலைமையிலிருக்கும்பொழுதுதான், கோகுல்சந்துக்கு வைத்தியம் செய்ய வந்து சேர்ந்தேன், தங்களுக்கு ஓர் உதவியாவது செய்யக் கொடுத்து வைத்திருந்ததே யென்று தங்களுக்காகத் தான் நான் அவ்வளவு சிரத்தை யெடுத்துக் கொண்டு, மிகுந்த ஜாக்ரதை யோடு சிரமப்பட்டு, வைத்தியம் செய்தேன். இது வரை என் மனதி லுள்ள எண்ணங்களை ஒருவரிடமும் சொல்ல வில்லை. என் மனதிலேயே பதிந்து கிடந்தன. இப்பவும் தாங்களிடம் தெரிவித்திருக்க மாட்டேன். எனக்குக் காலம் முடிந்துவிட்டபடியால், தங்கள் முக தரிசனம் செய்து என் மனதிலிருப்பதைச் சொல்லி விட்டுப் போனால் தான், என் ஆத்மா சாந்தியடையும் போலிருந்தது. அதனால் தான், நான் என் மனதி லுள்ளவைகளைச் சொன்னேன். தாங்கள் தயவு செய்து என்னை மன்னிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

கமலா:—டாக்டர், தாங்கள் ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்? உங்களுக்கு உடம்பு ஏதாவது அசௌக்கியமா? இவ்வளவு சீக்கிரத்தில் அகால மரணம் அடையப் போகிறேனென்று சொல்லுகிறீர்களே? யாது காரணம்?

சசீந்திரர்:—ஆம், அம்மா, எனக்குக் காலம் முடிந்துவிட்டதென்பது உண்மையே. இன்னும், ஒரு வாரம், பத்து நாட்களுக்கு மேல் இருக்கமாட்டேன். இறப்பேன் என்பது நிச்சயம். என் தகப்பனாருக்கு, அவருடைய துஷ்கிருத்தியங்களால், சில கெட்ட வியாதிகள் உண்டு. தகப்பனார் செய்த குற்றங்களுக்காக அவருடைய

குழந்தைகள் கஷ்டங்களை அனுபவிப்பது என்கிறது என்ன நியாயமோ, ஈச்வரனுக்குத் தான் வெளிச்சம். என் தகப்பனர் செய்த துஷ்கிருத்தியங்களுக்காக, ஒரு குற்றமும் செய்யாத நான், தண்டிக்கப்படுகிறேன். அவருடைய வியாதி எனக்கு வந்துவிட்டது. என் மனம் எப்பொழுதும் சஞ்சலப்பட்டுக்கொண்டேயிருந்ததினாலும், ஊண், உறக்கம், ஒன்றையும் நான் சரிவரக் கவனித்துக்கொள்ளாமலிருந்ததாலும், என்னிடம் அவ்வியாதி சீக்கிரமாக வந்துவிட்டது. ஆனாலுமென்ன, என் மனோ வியாதியிலிருந்து சீக்கிரம் விமோசனம் அடைந்து விடுவேன். அம்மா, நான் போய் வருகிறேன். கடைசித் தடவையாக விடைபெற்றுக்கொள்ளுகிறேன். கோகுல்சந்த் வரும் வரையில் இருக்கவேண்டிய அவசியமில்லை. நேரமாகிறது" என்று சொல்லிக்கொண்டே, தன் துக்கத்திற் கடையாளமாக, ஒரு கடிதத்தில் தன் பெயரை எழுதி, நாற்புறமும் கறுப்புக்கோடு கிழித்து, அக் கடிதத்தை கோகுல்சந்தின் தபாற் பெட்டிக்குள் போட்டு விட்டுப் போய்விட்டார்.

டாக்டர் போய்ச் சற்று நேரத்திற்கெல்லாம் கோகுல் சந்த் வந்தான். தபாற் பெட்டியில் கடிதம் கிடந்ததால் அதை எடுத்தான். டாக்டருடைய எழுத்து என்று தெரிந்ததால், அவன், 'நம்முடைய சந்தோஷமான வாழ்நாட்களில் இவன் ஒன்றிலும் ஆசை யற்றவனாயும், சந்தோஷமேயில்லாதவனாயும், நம் வாழ்வில் ஒரு *சாயைபோல வந்து தோன்றியிருக்கிறான்' என்று சொல்லிக்கொண்டே, கடிதத்தைப் பிரித்துப் பார்த்தான். உடனே திகைப்புற்றவனாய், "ஆ! கமலா, நம் டாக்டர் எழுதியிருக்கும் கடிதத்தைப் பார்! இதென்ன விந்தை! இக் கடிதத்தின் தாத்பரியம்

என்ன? அவர் உன்னிடம் ஏதாகிலும் சொன்னாரா?" என்று கேட்டான்.

கமலா:—ஆம், சற்று நேரத்திற்கு முன் அவர் இங்கு வந்தார். தனக்கு ஏதோ வியாதி யென்றும், அதினால் இன்னும் ஒரு வாரத்திற்குள் தான் மரண மடைவது நிச்சய மென்றும், என்னிடம் சொல்லிவிட்டு, நீங்கள் இல்லாததினால், உங்களுக்குத் தெரிவிப்பதற்காக இக் கடிதத்தை நம் தபாற்பெட்டிக்குள் போட்டு விட்டு, இனிமேல் ஒரு வினாடி கூட இவ்வூரில் தாமதிக்க மாட்டேனென்று என்னிடம் கூறிச் சென்றார்.

கோகுல்:—ஆகா! அப்படியா சமாச்சாரம்; ஐயோ, பாவம்; நல்ல மனிதன்" என்று, தன் நண்பனுக்காக மிகவும் துக்கித்தான். இச்சம்பவம் நிகழ்ந்து இரண்டு, மூன்று தினங்களாயின. கமலாவுக்கு டாக்டர் வந்து பேசி விட்டுப்போனது முதல், மனதானது கலங்கிப் போய், பலவாறு சிந்தித்துக்கொண்டே யிருந்தது. தனிமை யில் அதைப்பற்றி ஆராயலானாள். 'என் கணவர் எனக்கு வேண்டியன யாவும் கொடுப்பது என்ன அதிசயம், என்று டாக்டர் சொன்னாரே; அதை யோசித்துப் பார்த்தால், சரியாகத்தான் தோன்று கிறது. என் அழகுக்கும், தேகத்துக்கும், இச்சைப் பட்டுச் செய்கிறாரே யொழிய, வேறு என்ன சிநேகம் இருக்கிறது? வேறு எதைப் பற்றியோ, எந்தப் பேச்சோ, என்னோடு சொல்கிறாரா? இந்த வெட்கம் கெட்ட பிழைப்பும் ஒரு பிழைப்போ! இவரல்லாமல், வேறொரு மனிதன் கணவனாக வாய்த்திருந்தால், அவனும் இப்படியே செய்வான். இதி லென்ன ஆச்சரி யம்?' என்று எண்ணினாள். அப்படி யெண்ணும்

பொழுதே, மனத்தில் ஓர் எண்ணம் உதித்தது. 'கணவன், நமக்கு ஏதாவது ஆபத்து நேரிட்டால் (வில்லியம்ஸ் சட்டப்படி பிரியாதுகொடுத்தால்) அக் குற்றங்களை யெல்லாம், நமக்காகத் தானே மேற்போட்டுக்கொண்டு செய்வர்' என்கிற எண்ணம் உதிக்கவே, கொஞ்சம் சமாதானம் ஆயிற்று என்றாலும், அவளுடைய மனம், இன்னும் சிந்தனையிலே ஆழ்ந்திருந்தது.

அவள் இப்படி இருக்கையில், வேலைக்காரி வந்து, "அம்மா, தங்களைப்பார்ப்பதற்காக வாசலில் ஒருவர் வந்திருக்கிறார்." என்றாள்.

கமலா 'என்னைப் பார்ப்பதற்காக யார் வந்திருக்கிறது? போகச்சொல்லு, போ,' என்றாள்.

வேலைக்காரி திரும்பிவந்து, 'அம்மா, அவருக்கு ஏதோ மிகுந்த அவசரமான காரியமாம்; கட்டாயம் பார்க்கவேண்டுமென்று சொல்லுகிறார்' என்றாள்.

அவள் சொன்னதிலிருந்து, வந்திருக்கிறவன் வில்லியம்ஸ்தான் என்று தெரிந்துவிட்டது. ஒன்றுந் தோன்றாதவளாய், சங்கடப்பட்டுக்கொண்டு, "போ, வரச்சொல்" என்றாள். சற்றுநேரத்தில் வில்லியம்ஸ் வந்து சேர்ந்தான்.

கமலா:—நீ இங்கு எதற்காக வந்தாய்? மெதுவாகப்பேசு. என் கணவர் கச்சேரி அறையில் பாங்கி விஷயமான கணக்குக்கள் பார்த்துக்கொண்டிருக்கிறார். அவருக்குத் தெரியாமல், வந்த சமாசாரத்தை விரைவில் சுருக்கமாகச் சொல்லிவிட்டுப் போ.

வில்லியம்ஸ்:—(அலக்ஷ்யத்துடன்) உங்கள் கணவர் வீட்டிலிருந்தா லென்ன, எனக்கு ஒரு விஷய மல்ல.

கமலா:—உனக் கென்ன வேண்டும்? எதற்காக வந்தாய்?

வில்லியம்ஸ்:—ஒரு சமாச்சாரத்தை, இரண்டி லொன்று தீர்த்துக்கொண்டு போக வந்தேன்.

கமலா:—சரி, அதை சீக்கிரமாகச் சொல்லு, என்ன விஷயம்?

வில்லியம்ஸ்:—தங்கள் கணவரிடமிருந்து, இன்றைபதினம், என்னை வேலையிலிருந்து நீக்கிவிட்டதாக உத்திரவு வந்துவிட்டது. இவ்விஷயம் ஒரு வேளை தங்களுக் கும் தெரிந்திருக்கலாம்.

கமலா:—ஆம், தெரியும்; நானென்ன செய்வேன்? என்னால் கூடிய வரையில் சொல்லிப் பார்த்தேன்; ஒன்றும் பிரயோசனப் படவில்லை.

வில்லியம்ஸ்:—சரி, ஆனல் அவ்வளவு தானு?

கமலா:—என் கணவரின் கௌரவதைதயைக் கெடுத்து விடாதே.

வில்லியம்ஸ்:—நீங்கள் கடன் பத்திரம் தயாரிக்காமலிருந் தால், நீங்கள் சொல்லுவது சரிதான். இப்பொழுதோ, கோகுல்சந்தே வலுவில் எனக்கு வேலை கொடுப்பதை, நீங்கள் பார்க்கப் போகிறீர்கள்.

கமலா:—அது ஒருக்காலும் நடவாது.

வில்லியம்ஸ்.—உங்களுடைய அறியாமையே அறியாமை! என் வேலையைத் திருப்பிக் கொடுக்கா விட்டால் வரும் கெடுதி இன்னதென்று அறிய வில்லை போலும். இதோ, இனி வரப் போகும் பிரசண்டமாருதத்திற் கறி குறியாக, உங்களுடைய கணவருக்கு நான் ஒரு கடிதம் எழுதிக்கொண்டு வந்திருக்கிறேன்.

கமலா:—சாமாசாரம் எல்லாவற்றையும் எழுதியா?

வில்லியம்ஸ்:—ஆம்.



கமலா :—(துரிதத்துடன்) அவருக்கு அக் கடிதம் சேராமலிருக்க வேண்டும். கிழித் தெறிந்து விடு. எப்படி யாவது உன்னுடைய பணத்தைக் கூடிய சீக்கிரத்தில் கொடுத்து விடுகிறேன்.

வில்லியம்ஸ்:—அம்மா, அது முடியாது, ஒருக்காலும் முடியாது. நான் இவ்வளவு போதாகச் சொல்ல வில்லையா ?

கமலா:—பணம் எவ்வளவு கொடுபடவேண்டும் என்கிற விஷயத்தைப் பற்றி சொல்ல வில்லையே. எவ்வளவு பணம் கேட்டிருக்கிறாய், அதைச் சொல். நானே கொடுத்து விடுகிறேன்.

வில்லியம்ஸ்:—உங்களுடைய கணவனை ஒரு தம்பிடி கூடக் கேட்டு எழுத வில்லை.

கமலா:—ஆனால், வேறு என்ன கேட்டிருக்கிறாய் ?

வில்லியம்ஸ்:—நீங்கள் கடன் வாங்கியதையும், பத்திரத்தில் மோசக் கையெழுத்துப் போட்டதையும் தெரிவித்து, என் வேலையைத் திருப்பி எனக்குக் கொடாதபக்ஷத்தில், மோசக் கையெழுத்திற்காக விவகாரம் தொடங்கப் போவதாக எழுதியிருக்கிறேன். அதைப் பார்த்ததும், கோகுல் சந்த் உடனே என்னைக் கூப்பிட்டு, வேலையைக் கொடுத்து விடப் போகிறார். இது நிச்சயம்.

கமலா:—அந்த மாதிரி ஒரு போதும் நடவாது. எது வந்தாலும் அனுபவிக்க, இப்பொழுது எனக்குத் தைரியம் வந்து விட்டது.

வில்லியம்ஸ்:—ஒரு ஸ்திரீக்கோ அவ்வளவு தைரியம்! அதுவும் தங்களைப் போன்ற உன்னத ஸ்திதியிலிருப்பவருக்கு!

கமலா:—நீயே பார்ப்பாய்!

வில்லியம்ஸ்:—ஆகா, எளிதென்று எண்ணினீர் போலும். ஒருவரையும் காணாத, மனித சஞ்சாரமே அற்ற, அண்டமான் தீவிற்கு அனுப்பி விடுவார்கள்.

கமலா:—என்னைப் பயமுறுத்துகிறீயோ? உன்னால் முடியாது.

வில்லியம்ஸ்:—என்னையும் உங்களால் பயமுறுத்த முடியாது. என்னாலியன்ற மட்டும் ஒருகை பார்த்து விடுகிறேன். சரி, நான் போய் வருகிறேன்.

வில்லியம்ஸ் வெளிச்சென்றவுடன், கமலா, அவன் என்ன செய்கிறானென்று ஜன்னல் வழியாகப் பார்த்தாள். அவன் தன் சட்டைப்பையிலிருந்து ஒரு கடிதத்தை யெடுத்து, வாசல் சுவரில் மாட்டி யிருந்த தபாற் பெட்டிக்குள் போட்டு விட்டுப் போய் விட்டான். உடனே, கமலா, "ஹா!" என்று பெருமூச்சு விட்டு, 'நான் என்ன செய்வேன்! கடிதத்தைத் தபாற் பெட்டிக்குள் போட்டு விட்டானே! அந்தக் கடிதத்தை எடுத்து விடலா மென்றாலோ, பெட்டி பூட்டியிருக்கிறதே; சாவியோ, கணவரிட மிருக்கிறது. ஐயோ, இதென்ன கஷ்ட மேற்பட்டு விட்டது! நாதா! இனிமேல் நம்மிருவருக்கும் மிகுந்த கஷ்ட மேற்படப் போகிறது,' என்று, துயரத்தோடு பெருமூச்சு விட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

அச்சமயத்தில், தற்செயலாக, லூஸி வந்து சேர்ந்தாள். அவள் கமலாவைப் பார்த்ததும், திகைப்புடன், "கமலம்மா, நீங்கள் சிலநாட்களாக ஏதோ கவலையில் ஆழ்ந்திருக்கிறீர்கள். என்னிடம் சொல்லக் கூடாதா? இவ்வளவு சிநேகமாயிருக்கும் என்னிடத்தில் கூடவா மறைக்க வேண்டும். எனக்கு மிகுந்த வருத்தமாயிருக்கிறது. தயவு செய்து எனக்குச் சொல்ல வேண்டும்' என்று, மிகுந்த வருத்தத்துடன் கேட்டாள்.

கமலா:—உன்னிடம் சொல்லாமலென்ன? சொன்னால் தான் யாது பயன் என்று சொல்லவில்லை; வேண்டுமானால் சொல்லுகிறேன்" என்று, கடன் வாங்கினது முதல், வில்லியம்ஸ் கடிதம் தபாற் பெட்டிக்குள் போட்டது வரையில், ஒன்றையும் விடாமலுரைத்தாள்.

ஹாஸி:—அம்மா, இதை முன்னமேயே என்னிடம் சொல்லியிருந்தால், இவ்வளவு தூரத்திற்கு வராமல், அவனிடம் பேசி, சரிப்படுத்தியிருப்பேனே. சொல்லாமலிருந்து விட்டீர்களே. ஆனாலுமென்ன, இப்பொழுதே நான் அவனிடம் போய், இவ்விஷயங்களைப் பற்றிப் பேசி, அவன் அதைப் பற்றி ஒன்றும் செய்யாமலிருக்கும்படி சொல்கிறேன். நீங்கள், இன்று மாலை ஒரு விவாகத்திற்குப் போக வேண்டுமல்லவா? அதை ஒரு முகாந்தரமாகக் கொண்டு, தங்கள் கணவர் தபாற் பெட்டியைப் பார்க்காமல் யுக்தி செய்து, அந்த வீட்டிற்குப் போய் விடுங்கள்; நான், நீங்கள் திரும்புவதற்குள் எல்லாம் சரிப்படுத்தி விடுகிறேன்.

கமலா:—நீ ஏன் வீண் முயற்சி செய்கிறாய்? அவன் ஒரு முரடன். நீ சொல்லுவதை ஒரு பொருட்டாய் எண்ணுவானா? நீ ஒன்றும் அவன் வீட்டிற்குப் போக வேண்டாம்.

ஹாஸி:—இல்லை, நான் சொன்னால் ஒருவேளை அவன் கேட்கக்கூடும். நீங்கள்தான் வெளியில் போகப்போகிறீர்களே. அவனையே இவ்விடம் வரவழைத்துப் பேசுகிறேன்.

கமலா:—சரி, உன் இஷ்டப்படி செய்" என்று சொல்லிக் கொண்டிருக்கும்பொழுதே, "கமலா," என்று கூப்பிட்டுக்கொண்டே கோகுல்சந்த் வந்தான். "என்ன

கமலா, உட்கார்ந்திருக்கிறயே; நாழிகை யாய்விட்டதே; அவர்கள் வீட்டிற்குப் போகவேண்டாமா?" என்றான். "இதோ வந்துவிட்டேன்" என்று, கமலா எழுந்தாள். கோகுல்சந்த், "தபால் வந்திருக்கிறதோ வென்று தபாற்பெட்டியைப் பார்த்துவிட்டு வருகிறேன்" என்றான். கமலா, அதைத்தடுத்து, 'நாழிகை யாய்விட்டது. பிறகு பார்த்துக்கொள்ளலாம்' என்றாள். 'ஆனால் சரி, சீக்கிரம் புறப்படு' என்றான். உடனே கமலா லூஸியைப்பார்த்து, "நாங்கள் வரும் வரையில் வீட்டிலேயே யிருங்கள்" என்று சொல்லி விட்டு, இருவரும் போய்விட்டார்கள். இவர்கள் சென்றவுடன், லூஸி, வில்லியம்ஸுக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பி, அவன் வருவதை எதிர்பார்த்தவளாயிருந்தாள். சற்று நேரத்தில் வில்லியம்ஸ் வந்துசேர்ந்தான்.

லூஸி:—வாருங்கள், இவ்விடம் ஒருவரு மில்லை; இப்படி உட்காருங்கள்.

வில்லியம்ஸ்:—உன்னிடமிருந்து கடிதம் வந்ததினால் வந்தேன். என்ன விசேஷம்?

லூஸி:—உங்களுடன் அத்யாவசியமான சில சமாசாரங்கள் பேசவேண்டி யிருக்கின்றன.

வில்லியம்ஸ்:—உண்மையாகவா! மிகுந்த அவசியமான காரியமா? இவ்விடத்தில் பேசலாமா?

லூஸி:—நான் நாலு குடிக்கு நடுவே வசிப்பதால், அவ்விடம் பேசுவது சரியில்லை யென்று, உங்களை இவ்விடம் வரச்சொன்னேன். இவ்வீட்டில் நம்மிருவரைத்தவிர, இப்பொழுது ஒருவரு மில்லை. வேலைக்காரர்க ளெல்லாரும் படுக்கப்போய் விட்டார்கள். கோகுல்சந்த், உற

னைரொருவருடைய பாட்டுக்கச்சேரிக்கு, கமலம்மா வுடன் போயிருக்கிறார். வருவதற்குப் பன்னிரண்டு மணி ஆகும்.

வில்லியம்ஸ்:—(உள்ளே பிரவேசித்துக்கொண்டே) கோகுல் சந்த் இன்று பாட்டுக்கச்சேரிக்குப் போயிருக்கிறாரா? நிஜம்தானா!

லூஸி:—ஆம்! ஏன் போகக்கூடாது?

வில்லியம்ஸ்:—என் கடிதத்தை அவர் பார்க்கவில்லை போலும்?

லூஸி:—அது கிடக்கட்டும். நாம் வந்த சமாசாரத்தைப் பற்றிப் பேசுவோம்.

வில்லியம்ஸ்:—நாம் பேசுவதற்கு என்ன இருக்கிறது?

லூஸி:—பேசுவதற்கு நிரம்ப இருக்கிறது.

வில்லியம்ஸ்:—அப்படி இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.

லூஸி:—நீங்கள் என்னைப்பற்றிச் சரியாக அறியவில்லை போலும்.

வில்லியம்ஸ்:—அறியாமலென்ன? ஒருவனை விவாகம் செய்துகொள்ளுவதாக வீண் ஆசைகாட்டி ஏமாற்றி விட்டவளென்று தெரியாதா, என்ன.

லூஸி:—நான் அதை மனப்பூர்வமாகச் செய்யவில்லை.

வில்லியம்ஸ்:—மனப்பூர்வமாகச் செய்யவில்லையா!

லூஸி:—என்னைப்பற்றி அப்படி எண்ணுகிறீர்களா?

வில்லியம்ஸ்:—அப்படியானால் உன் எண்ணத்தை அப்பொழுதே தெரிவிக்கிறதுதானே.

லூஸி:—எனக்கு அச்சமயம் எப்படி இருந்ததென்றும், நான் நிர்க்கதியாய் ஒன்றுமில்லாமல் ஆதரிப்பாரற்று இருந்ததும், என் வீட்டுக்கஷ்டங்களும், தங்களுக்குத் தெரிந்தவைதானே.

வில்லியம்ஸ்:—உன் பணக் கஷ்டத்திற்காகவோ, வேறு எதற்காகவோ, நீ என்னை நிராகரித்துவிட்டது முதல், எனக்கு நிரம்பவும் வருத்தம். கடைசியில் வேண்டா வெறுப்பாய் ஒருத்தியை மணந்தேன். அவளும் நாலு குழந்தைகளை விட்டு விட்டு, இறந்துபோய் விட்டாள். இப்பொழுது இன்னது செய்வதென்று தெரியாமல், தத்தளித்துக் கொண்டிருக்கிறேன்.

லூஸி:—நானோ, தனக்குத்தானே வேலை செய்துகொண்டு சாப்பிடுவதில் மிகுந்த வெறுப்புள்ளவளா யிருக்கிறேன். குழந்தைகளை வளர்க்கவேண்டு மென்கிற ஆசையும், ஒரு புருஷனுக்கு வேலைசெய்ய வேண்டு மென்கிற எண்ணமும் இருக்கிறது.

வில்லியம்ஸ்:—நீ சொல்லுவதைப் பார்த்தால், நீ என்னை அங்கீகரிக்கத் தயாராக விருப்பதுபோலத் தோன்றுகிறதே. என்னுடைய துஷ்கிருத்தியங்களையும் என்னைப்பற்றி உலகம் எப்படி இகழ்கிறது என்று தெரிந்த பிறகுகூட, நீ என்னை ' நேசிக்கிறாயா '?

லூஸி:—ஆம், நீங்கள் என்னைமணம்புரிந்திருந்தால், இம்மாதிரியான நிலைமைக்கு வந்திருக்க மாட்டீர்களென்றும், கண்ணியம் வாய்ந்த மனிதர்களிலொருவராக இருந்திருப்பீர்களென்றும், நீங்கள் சொல்லுவதிலிருந்து தெரிகிறது. ஆம், அது நிஜந்தான். உங்களுடைய நற்குணத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு. உங்களைப் பற்றின விஷய மெல்லாம் எனக்குத் தெரிந்திருப்பதாலும், இருவரும் பரஸ்பரம் ஒருவரையொருவர் நேசிப்பதினாலும், நாமிருவரும் இனிமேல் சேர்ந்திருப்போம்.

வில்லியம்ஸ்:—(ஆச்சரியத்துடன்) இது வாஸ்தவம்தானா? எனக்கும் இப்படிப்பட்ட சந்தோஷகாலம் வருமா? இதை நான் கிஞ்சித்தும் எதிர்பார்த்தே னில்லையே.

ஹூஸி:—நீங்கள் சொல்லுவ தெல்லாம் இருக்கட்டும். நான் சொன்னது நடக்கவேண்டுமானால், நீங்கள் எனக் கொன்று செய்யவேண்டும்.

வில்லியம்ஸ்:—ஏதுவானாலும் செய்யத் தயாரா யிருக்கி றேன்.

ஹூஸி:—மிகவும் குதூகலத்துடனிருக்கிற ஒரு சதிபதியை என் வீணாய் மனவருத்தமடையச் செய்கிறீர்கள்?

வில்லியம்ஸ்:—ஓஹோ, நீ இதுதான் கேட்பா யென்று முன்னமேயே எண்ணினேன். இதைச் சற்றுநேரத் திற்குமுன் சொல்லியிருந்தால் சரியாக முடிந்திருக் குமே. நான் கடிதமெழுதி, கோகுல்சந்திரனுடைய தபாற்பெட்டியில் போட்டுவிட்டேனே, என்ன செய் கிறது?

ஹூஸி:—இன்னும் அக்கடிதம் பெட்டியிலேயேதா னிருக்கி றது.

வில்லியம்ஸ்:—ஓஹோ? அதுதான் கோகுல்சந்த் தமாஷா கப் பாட்டுக்கச்சேரிக்குப் போயிருக்கிறார்.

ஹூஸி:—இவர்களுக்குக் கெடுதி செய்வதைப்பற்றிக் கனவி லும் கருதக்கூடாது. முற்றிலும் மறந்துவிட வேண் டும்.

வில்லியம்ஸ்:— சரி, கடிதம் இன்னும் பெட்டியிலேயே யிருப் பதால், கோகுலசந்த் வரும்வரையில் இவ்விடத்தி லேயேயிருந்து, கடிதத்தைத் திருப்பிக்கொடுக்கும்படி கேட்டு வாங்கிக்கொள்ளுகிறேன்.

ஹூஸி:—அது ஒன்றும் முடியாத காரியம்: ஒருக்காலும் நட வாது. நீர் இக்ஷணமே வீட்டிற்குப்போய், அந்தக் கடன் பத்திரத்தை ஒரு கவரில் போட்டு ஒட்டி, கமலா பாயினிடம் அனுப்பிவிட வேண்டும்; பணத்தை அவர்

கள் ஒருபோதும் மோசம்செய்ய மாட்டார்கள். இவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும் பொழுதே, வெளிப்புறம் வண்டிவரும் சப்தம்கேட்க, லூஸி, அவனைப்பார்த்து, "நீங்கள் சீக்கிரம் இவ்விடம்விட்டுப் போய்விடுங்கள்; அவர்கள் வந்துவிட்டார்கள்போலிருக்கிறது. நீங்கள் வீட்டுப் பின்பக்கமாகப் போங்கள்" என்ருள்.

வில்லியம்ஸ்:—'நீ சொல்லுகிறபடியே போய் தெருப்பக்கம் வந்து உனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறேன்' என்று போய்விட்டான்.

சிறிது நேரத்தில் அவர்களிருவரும் உள்ளே வந்தார்கள். கோகுல் சந்த், லூஸியைப் பார்த்து, "அம்மா வந்தனம், உங்களுக்கு மிகவும் நாழிகையாய் விட்டது. எங்களுக்காக வெகு நாழிகை காத்துக் கொண்டிருந்தீர்கள்" என்று சொல்லி விட்டு, உடுப்புக்களை களைவதற்குப் போய் விட்டான்.

லூஸி:—கமலம்மா, நீங்கள் கவலைப்பட வேண்டாம்;எல்லாம் சரியாக முடிந்து விட்டது. பத்திர விஷயத்தைப் பற்றிக் கணவனிடம் சொல்லி விடுங்கள்.

கமலா:—நான் அதைப்பற்றி ஒன்றும் சொல்லவே மாட்டேன்.

லூஸி:—கடிதத்தினுல் தெரிந்து விடுமே.

இவர்கள் பேசிக் கொண்டிருக்கும் பொழுதே கோகுல் சந்த் உள்ளே வந்து விட்டான். உடனே லூஸி கமலாவினிடம் விடை பெற்றுச் சென்ருள்.

கோகுல்:—கமலா என்ன ஒரு மாதிரியா யிருக்கிருயே? சிரமமாயிருக்கிறதோ?" என்று கேட்டுக்கொண்டே கொத்துச்சாவியை எடுத்துக்கொண்டு வாசற்பக்கம் போனுன்.

கமலா:—இரவில் வேலைசெய்யப் போகிறீர்களா ? என்ன !

கோகுல்: —இல்லை தபாற்பெட்டி நிறையக் கடிதங்கள் வந்திருக்கின்றன. காலையில் வர்த்தமானப் பத்திரிகை போடுவதற்குப் பெட்டியில் இடமில்லையாகையால், அக்கடிதங்களையெல்லாம் எடுத்துக்கொண்டு வருகிறேன். (வெளியில்போய் அக்கடிதங்களை யெல்லாம் கையில் எடுத்துக்கொண்டுவந்து) இதோபார், எவ்வளவு கடிதம் வந்திருக்கின்றன! கண்ணே, வா, நாம் படுக்கைக்குப் போவோம்.

கமலா:—வந்தனம், எனக்கு உடம்பு சரியாகவில்லை. அதனால், நான் தனிமையில் நித்திரை செய்ய விரும்புகிறேன்.

கோகுல்:—சரி, அப்படியே செய், என் அருங்கிளியே ; நன்றாக நித்திரை செய்; நன்றாக சிரமபரிகாரம் செய்து கொள். நீ தான் உன் அறையிலேயே யிருக்கப் போகிறே னென்கிறாயே. அதனால் நான் என் கடிதங்களை யெல்லாம் பார்க்கிறேன்.''

கடிதங்களை யெல்லாம் கையில் எடுத்துக் கொண்டு கதவை மூடிக் கொண்டு கோகுல்சந்த் போனான்.

கமலா:—(பைத்தியம் கொண்டவள் போல இருட்டில் அங்கு மிங்கும் கைகளால் தடவி வழியைப் பார்த்துக் கொண்டு, தன் கணவனின் தலைப்பாகைத் துணியை எடுத்து முகத்தை மூடிக் கொண்டு, துக்கம் நெஞ்சடைக்க, தனக்குத் தானே சொல்லிக் கொள்ளுகிறாள்.) 'நாதா, இனி மேல் உங்களைப் பார்க்க மாட்டேன். இல்லை, எப்பொழுதும் இல்லை!' என்று சொல்லிக் கொண்டே தன் போர்வையால் தேக முழுவதும் மூடிக் கொண்டு, பின்னும் பிதற்றுகிறாள்.

"என் குழந்தைகளைக் கூட பார்க்கப் போவதில்லை!-நிஜமாகவா-ஆம்! இனி மேல் பார்க்கப் போவதில்லை!—நல்லதிற்காகப் பணம் வாங்கப் போய் தீ-வு-க்-கா, த-ண்-ணி-மே-லா-ஏற்றுகிறது-ஆ! ஐயோ, கையில் இப்பொழுது கடிதத்தை எடுத்திருக்கிறார்—இதோ, படிக்கிறார்! நாதா, வந்தனம், போய் வருகிறேன். அருமைக் குழந்தைகளே, போய் வருகிறேன்!"—என்று சொல்லிக் கொண்டு வெளிக் கூடத்திற்கு வருகிறாள்.

அச்சமயம், கோகுல்சந்த் ஒரு கடிதத்தைக் கையில் பிரித்து எடுத்துக் கொண்டு, துரிதமாகக் கதவைத் திறந்து கொண்டு வருகிறான்

கோகுல்:—கமலா!

கமலா:—ஆ!

கோகுல்:—கமலா, இக்கடிதம் இன்னதென அறிவாயா?

கமலா:—ஆம், நான் அறிவேன்; என்னைப் போக விடுங்கள், நான் போகிறேன்.

கோகுல்:—(அவள் முன்தானையைப் பிடித்துக் கொண்டு) எங்கே போகிறாய்?

கமலா:—(தன் தலைப்பை அவன் கையிலிருந்து இழுத்துக் கொண்டே) நீங்கள் என்னைக் காப்பாற்ற வேண்டாம்.

கோகுல்:—(தடுமாற்றத்துடன்) உண்மைதானா! நான் இதில் படிப்பது நிஜமாயிருக்குமா? திகிலடையச் செய்கிறது. இராது, இருக்கவே இருக்காது. இது நடந்திராத காரியம்.

கமலா:—இல்லை, அக் கடிதம் உண்மைதான்; ஏனெனில், இவ்வுலகத்திலுள்ள யாவற்றிற்கும் மேலாக நான் தங்களை நேசித்தேன்?

கோகுல்:—உன் பேதைமையான வார்த்தைகள் இப்பொழுது வேண்டியதில்லை.

கமலா:—(அவர் கிட்டச் சென்று) நாதா!—

கோகுல்:—தௌர்ப்பாக்யமானவளே, நீ என்னசெய்தாய்?

கமலா:—என்னைப் போக விடுங்கள்; எனக்காகத் தாங்களொன்றும் அனுபவிக்க வேண்டாம்; உங்கள் மேல் யாதொரு பொறுப்பும் வேண்டாம்; நான் எங்காவது சென்று விடுகிறேன்.

கோகுல்:—மூடமே, வீண் அகங்காரம் கொள்ளாதே. (கூடத்தின் கதவைத் தாளிடுகிறான்) எனக்கு இப்பொழுது நீ யாவற்றையும் விரித்துரைக்க வேண்டும். நீ செய்திருக்கிறது இன்னதென் றறிவாயா? எனக்குப் பதில் சொல்லு? நீ என்ன செய்தாய்?

கமலா:—(நேராக நின்று கொண்டு முகத்தில் கோபம் விளங்கச் சொல்லுகிறாள்) ஆம், இப்பொழுது தான் நான் நன்றாக அறிகிறேன்.

கோகுல்:—(உலாவிக் கொண்டே) என்னைத் திடுக்கிடச் செய்கிறது! இந்த—பத்து வருடங்களாக—என்னுடைய சந்தோஷத்துக்கும், கர்வத்துக்கும் முக்கியமாயிருந்தவள்—ஒரு வேஷதாரி—பொய் சொல்பவள்—அது மாத்திரமா!—இவைகள் யாவையும் விடக் கெட்டவள்.-மிகுந்த குற்றம் செய்த ஒரு குற்றவாளி; இதை விட வேறு என்ன வேண்டும்!—ஐயோ, வெட்கம்! மிகுந்த அவமானம்.

(இவற்றை யெல்லாம் கேட்டுக் கொண்டு ஸ்தம்பித்தவளாய் ஒன்றும் பேசாமல் அவனெதிரில் நிற்கிறாள்) கோகுல்சந்த் இன்னும் இடித்துரைக்கலானான்: "இந்த மாதிரியாக வருமென்று முன்னடியே எண்ணினேன்:

ஏனெனில், உன் தகப்பனரின் நடத்தையைப் பற்றியே; அவர் ஒரு மாதிரி மனுஷ்யர், அவரும் இம் மாதிரி, சில தப்பு தண்டா செய்ததாக, அவர் இறந்த பிறகு கேள்விப் பட்டேன். தகப்பனர் குணம் பெண்ணிற்கு வாாமலிருக்க வேண்டுமே யென்று, பயப் பட்டேன். நான் பயந்ததுக் கேற்றுப் போல், இப்பொழுது நீ செய்திருக்கிறுய்.

கமலா:—ஆம்.

கோகுல்:—என்னுடைய சந்தோஷங்க ளெல்லாவற்றையும், நீ அழித்து விட்டாய். எனக்கு வருங்கால நன்மையை யும், நீ நாசம் செய்து விட்டாய். அதை நினைக்கவே பயமாயிருக்கிறது! அதர்மத்திற் கஞ்சாத ஒருவன் கையில், நான் அகப்பட்டுக் கொண்டிருக்கிறேன். அவன் என்னை என்ன வேண்டுமானுலும். செய்யலாம். அவன் இஷ்டப்பட்டதை யெல்லாம் என்னைக் கேட்க லாம். அவனுடைய இஷ்டம் போல எனக்கு எவ்வித மான கட்டளை வேண்டுமானுலும் இடலாம். நான் அவைகளுக் கெல்லாம் கட்டுப்பட வேண்டியவனுயிருக் கிறேன். யோசனை யற்ற ஒரு ஸ்திரீயின் செய்கை யினுல், என் வாழ் நாள் முழுவதும் துக்கக் கடலி லேயே மூழ்கியிருக்க வேண்டும்.

கமலா:—நான் எங்காவது சென்று விடுகிறேன்; நீங்கள் சுவாதீனமா யிருக்கலாமே.

கோகுல்:—போதும், உனது புத்தி; வீண் வார்த்தையா டாதே. உன் பிதற்றலே பிதற்றல். நீ போய் விட்டால் மிகவும் நல்லது வந்து விடுமோ? அனுவளவு மில்லை. அவன் எல்லாரிடமும் தாறுமாருகச் சொல்லுவான். அது மாத்திரமா, நீ செய்த காரியத்தில் நானும் உடந்தையாயிருந்த தாகச் சொல்லுவான். இதைக்

கேட்ட ஜனங்கள், நானும் குற்றத்தில்சேர்ந்தவனென்றும், நீ போனதற்குக் கூட நான் தான் காரணமென்றும், எண்ணுவார்கள். நீ இவ்வளவு தூரம் செய்தது போதும். நீ வீட்டை விட்டுப் போய், அது வேறு அவமானம் எனக்கு உண்டாக்காதே. நாமிருவரும் விவாகம் செய்து கொண்டு இவ்வளவு நாட்கள் சேர்ந்திருந்ததற்கு, இப்பொழுது நீ என்ன செய்திருக்கிறாய் தெரியுமா ?

கமலா:—(மெதுவாக) ஆம் தெரியும்.

கோகுல்:—இப்பொழுது நான் விபரீதமான செய்கைகளைச் செய்ய வேண்டும். தவிர, நாமிருவரும் ஒரு முடிவுக்கு வரவேண்டும். என்ன முடிவு வேண்டியிருக்கிறது ? போர்வையை எடு; எடு போர்வையை; நான் சொல்லுவதைக் கவனி. நான் இப்பொழுது அவனைச் சாந்தப் படுத்த ஏதாவது வழி தேட வேண்டும். இச் சமாசாரத்தை ஒருவரும் அறியாமலிருக்கும்படி செய்ய வேண்டும். இனிமேல் உனக்கும் எனக்கும் முன் போலில்லாமல், அனேகவித மாறுதல்கள் ஏற்படும். ஆனால் நீ இவ் வீட்டிலேயேதா னிருக்கவேண்டும். வெளிக்கு மாத்திரம் புருஷன், பெண்சாதி என்று தெரிய வேண்டுமே யொழிய, வீட்டில் முன்போல இருக்கக் கூடாது. குழந்தைகளை நீ எப்படி வளர்ப்பாய் ? உன்னை நம்பிக் குழந்தைகளை எப்படி விடுகிறது ? நான் மிகவும் அருமையாக எண்ணியவள்.—மிகவும் 'அன்பித்தவள்.'—இன்னமும், அ......ன்......பு......இல்லை, இல்லை. எல்லாம் முடிந்துபோய் விட்டது. இந்த க்ஷணத்திலிருந்து, சந்தோஷ மென்பதே இருந்ததோ, இல்லையோ வென்று போய்விடும். உனக்கும், எனக்கும்

*இதுடன் முடிந்துவிட்டது."* என்று கோகுல்சந்த் இன்னும் பலவாறு சரமாரியாய் பொழிந்து கொண்டிருக்கும் பொழுதே, வாசற்பக்கம் மணிச்சத்தம் கேட்கிறது.

கோகுல்:—*(திடுக்குற்று நாக்குழற) அதென்ன? இரவில் இந்நேரத்தில் யார் வருகிறது? ஒரு வேளை அவனாயிருக்குமோ? கமலா, நீ ஒளிந்துகொள்ளு, உடம்பு அசௌக்கிய மென்று சொல்லு. (இதைக் கேட்டதும் கமலா ஸ்மரணையற்று நிற்கிறாள். கோகுல்சந்த் போய்க் கதவைத் திறக்கிறான்).*

வேலைக்காரி:—*ஐயா, அம்மாவுக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது.*

கோகுல்:—*"அதை இப்படிக் கொடு" என்று கடிதத்தை வாங்கிக்கொண்டுக் கதவைத் தாளிட்டுவிட்டு, கடிதத்தைப் பார்ப்பதற்குள், "ஆம், அவனிடத்திலிருந்து தான் வந்திருக்கிறது. நீ அதைப் பார்க்கக்கூடாது. அதை நானே படிப்பேன்."*

கமலா:—*சரி, படியுங்கள்.*

கோகுல்:—*(விளக் கண்டை போய், படிக்க முயல்கிறான்) இதைப் படிக்கக் கூட முடியவில்லையே! நம் இருவரையும் நாசம் செய்வதற்கு வந்திருக்குமோ இது? இல்லை, சரியாகப் பார்க்கிறேன். (என்று கடிதத்தின் உறையைக் கிழித்து, கடிதத்தின் சில வரிகளைப் பார்த்துவிட்டு, அதினுடன் வைத்திருந்த மற்றொரு கடிதத்தைப் பார்க்கிறான்; உடனே சந்தோஷத்தோடு, "கமலா!" என்கிறான். அவள் ஒன்றும் பேசாமல், அவன் முகத்தையே உற்று நோக்குகிறாள்.) கமலா! இரு,—நான் மறுபடியும் படித்து*

விட்டுச் சொல்லுகிறேன். ஆம், சரிதான், அது உண்மைதான், கமலா, நான் தப்பித்துக் கொண்டேன்.

கமலா:—நானே!

கோகுல்:—நீயும்தான், நாமிருவரும் தப்பினோம். இதோ பார்! உன்னுடைய பத்திரத்தை உனக்குத் திருப்பி அனுப்பி யிருக்கிறான். தவிர, தான் செய்ததைப் பற்றி அனுதாபங் காட்டி, பச்சாத்தாபப் படுவதாக வும், அவனுடைய வாழ்நாளில் ஒரு சந்தோஷமான மாறுதல் ஏற்பட்டிருப்பதாகவும், எழுதி யிருக்கிறான். எப்படி யானாலு மாகுக, நாம் தப்பினோம். கமலா! இனிமேல் உனக் கொன்றும், ஒருவராலும் செய்ய முடியாது. ஓ! கமலா, இப்பொழுது நம்மிருவருக் கும், இம்மாதிரி துவேஷத்தையும், துக்கத்தையும் உண்டாக்கின இக்கடிதத்தை அழித்துவிடுகிறேன். இதோ பார்! (என்று சொல்லிக்கொண்டே அப்பத்தி ரத்தையும், 'கடிதத்தையும், துண்டு துண்டாக் கிழித்து, அங்கு எரிந்து கொண்டிருக்கும் கணப்பில் போட்டுவிட்டு, அது எரிந்து சாம்பலாகும் வரையில் பார்த்துக்கொண் டிருந்துவிட்டு) கமலா, நம்மைப் பிடித்த சனியன் தொலைந்துவிட்டது" என்றான்.

கமலா:—அப்பாடா! இந்த மூன்று தினங்களாக நான் பட்டபாட்டை யாரே அறிவர்.

கோகுல்:—என் அருமைக் கமலா, நான் சொன்ன யாவற்றையும் மறந்துவிடு. சற்று முன் நடந்த பயங்கர மான எண்ணங்கள், வார்த்தைகள், யாவையும் கனவு போல் மறந்துவிட்டு, நாம் சந்தோஷக் கூச்சல் போட வேண்டும். நமது கஷ்டம் தீர்ந்துவிட்ட தென்று, உனக்குத் தோன்றவில்லையா? இதென்ன! உன்

முகம் சரே லென்று மாறுதலடைகிறது? என்ன, என் அருமைக் கமலா, நான் உன்னை மன்னிக்க வில்லை யென்று எண்ணுகிறாயா? கமலா, என் அன்பே, நான் உண்மையாய், ஆணையிட்டுச் சொல்லுகிறேன், உன்னை எல்லாவற்றிலும் மன்னித்துவிட்டேன். இது சத்தியம். நீ எதற்காகச் செய்தா யென்று, நான் அறி வேன். என்மீதிருந்த அன்பினால் தான் செய்தாய்.

கமலா:—அது உண்மையே, முக்காலும் உண்மை.

கோகுல்:—என்மீதிருந்த பிரியத்தினால் தான் செய்தாய், ஆனால், இது சரி, இது தப்பு என்று பார்ப்பதற்கு, உனக்குப் படிப்பும் ஊகமும் போதவில்லை. அது என் குற்றம்தான். இனிமேல், உனக்கு யாவும் நான் கற்பிக்கிறேன். போனது போகட்டும். என் மனது கலவர மடைந்த சமயத்தில் சொன்ன அந்தக் கடுஞ் சொற்களை யெல்லாம் மறந்துவிடு. நான் உன்னை மன்னித்தேன்.

கமலா:—நீங்கள் மன்னித்ததற்காக ஆயிரங் கோடி வந்தனம்." (என்று சொல்லிவிட்டு, வலதுபக்கத்தறைக் குள் போகிறாள்.)

கோகுல்:—(உள்ளே போய்ப் பார்த்து) அங்கே என்ன செய்கிறாய்?

கமலா:—(உள்ளே யிருந்துகொண்டே) நல்ல உடைகளை யும், ஆபரணங்களையும் களைந்து வைக்கிறேன்.

கோகுல்:—சரி, செய். உனக்கு மிகவும் களைப்பா யிருப்பு தால், இளைப்பாற விரும்புகிறாய்போலும். உன் மனப் தத்தளித்துப் போயிருக்கும்; அதையும் சாந்தப் படுத்திக்கொள். ஒன்றுக்கும் கவலைப்படாதே. கமலா இதென்ன படுக்கைக்கு ஏன் போக வில்லை? உன்

சாமான்களை யெல்லாம் சரிவர வைத்துக்கொள்ளு கிருயா, என்ன ?

கமலா:—ஆம், இப்பொழுது என் சாமான்களை யெல்லாம் மாற்றிக்கொள்ளவேண்டும்.

கோகுல்:—எதற்காக? இரவில் நடுநிசியில், இந்நேரத்திலேன் செய்யவேண்டும்!

கமலா:—இன்றிரவு நான் தூங்கப்போவ தில்லை.

கோகுல்:—ஆனால், என்ன செய்யப் போகிருய், என் அருமைக் கமலா ?

கமலா:—(தன் கடியாரத்தைப் பார்த்துவிட்டு) இன்னும் அப்படி வெகு நாழிகை ஆகவில்லை. இப்படி உட்காருங் கள். நாமிருவரும் பேசவேண்டியது கொஞ்சம் இருக் கிறது. (என்று சொல்லிவிட்டு மேசையின் ஒரு பக்கத் தில் உட்காருகிருள்.)

கோகுல்:—கமலா, இதென்ன உன் முகம் வேறுபட்டிருக் கிறது ?

கமலா:—சிறிதுநேரம்தான் உங்களோடு பேச வேண்டி யிருக்கும்.

கோகுல்:—(மேசையின் எதிர்ப்பக்கத்தில் உட்காருகிருன்) கமலா, நீ என்ன, என்னைப் பயமுறுத்துகிருயா? நீ என்ன செய்கிரு யென்று எனக்குப் புரியவில்லையே!

கமலா:—என்னைப்பற்றி உங்களுக்குப் புரியாமலிருப்பது இன்றிரவு தான். நான் உங்களைப்பற்றி இராத்திரவுக்கு முன் அறிந்து கொள்ளவில்லை. நான் பேசுவதற் கிடை யில், பேசாதேயுங்கள். நான் சொல்லுவதைக் கேட் டுக் கொண்டிருக்க விரும்புகிறேன். இதுதான், கடைசி யாக நம் வியவகாரங்களைத் தீர்த்துக் கொள்ளுகிற நாள்.

கோகுல்:—நீ சொல்லுவதின் தாத்பரியம் புரியவில்லையே?

கமலா:—(சிறிது நேரம் மௌனமா யிருந்துவிட்டு) இம் மாதிரி நாமிருவரும் உட்கார்ந்து பேசுவது, இதுதான் முதல் தடவை.

கோகுல்:— அதென்ன?

கமலா:—நமக்கு விவாகமாகி, ஏறக்குறைய, பத்து வருடங்களாகின்றன. நாமிருவரும் ஏதாவது முக்கிய மான விஷயத்தைப்பற்றிப் பேசினதுண்டா?

கோகுல்:—முக்கியமான விஷய மென்கிறாயே, அதின் அர்த்த மென்ன?

கமலா:—இந்தப் பத்து வருடங்களாக—நாமிருவரும் சேர்ந் திருக்க ஆரம்பித்தது முதல்—முக்கியமான எந்த விஷ யத்தைப்பற்றி யேனும், யாதொரு வார்த்தையும் நாம் பேசினதே யில்லை.

கோகுல்:—என் கச்சேரி விஷயமான சங்கதிகளைப் பற்றி யெல்லாம், உனக்குச் சொல்லுவதில் ஏதாவது லாபம் உண்டா? உனக்கு வீண் கவலைகளை யெல்லாம் சொல்லு வானேனென்று சொல்ல வில்லை.

கமலா:—கச்சேரி விஷயங்களைப்பற்றி நான் ஒன்றும் சொல்ல வில்லை. வேறு விஷயத்தைப்பற்றியும் பேசின தில்லை.

கோகுல்:—என் அருமைக் கமலா! அதனால் உனக்கு ஏதா கிலும் நன்மை யுண்டா?

கமலா:—நான் முதலில், தகப்பனாராலும், பிறகு உங்களா லும் மதியீன ளாக்கப்பட்டேன்.

கோகுல்:—என்ன! நாங்களிருவருமா! இவ்வுலகில் எங்க ளிருவரைத் தவிர, வேறு யார் உன்னை 'அன்பிக்க'ப் போகிறார்கள்.

கமலா:—(தலையை ஆட்டிக் கொண்டு) நீங்கள் என்னை ஒரு நாளும் 'அன்பிக்க'வில்லை; என்மேல் ஆசையிருந்த தால், அதை ஒரு சந்தோஷமாக மாத்திரம் எண்ணி னீர்கள்.

கோகுல்:—நான் கேட்பது நீ சொல்லுகிறது தானா?

கமலா:—நான் சொல்லுவது முற்றிலும் உண்மை. சிறிய வளாய், பிறந்தகத்தி லிருந்த பொழுது, தகப்பனார் சொன்னதையே செய்துகொண் டிருந்தேன். அவர் என்னை ஒரு விளையாட்டுப் பொம்மையைப் போல நடத்துவர். நான் என்னுடைய பொம்மைகளுடன் விளையாடுவது போல, அவர் என்னுடன் விளையாடு வார்; பிறகு உங்களுடன் வசிப்பதற்கு வந்தேன்.—

கோகுல்:—நம்முடைய விவாகத்தைப்பற்றி யெல்லாம் இப் பொழுது பேசுவானேன்?

கமலா:—நீங்கள் உங்களுடைய வழிகளுக்குத் தகுந்தாற் போல, என்னை ஏமாற்றினீர்கள்.

'சொன்னதைச் சொல்லுங் கிளிப்பிள்ளை' என்கிற மாதிரி, நீங்கள் சொல்லுகிறபடி யெல்லாம் இருந்தேனே யொழிய, நான் சுயமாக ஒரு காரியமும் செய்ய வில்லை. ஒன்றையும் அறியாமல், குதூகலமாக இருந்தேனே யொழிய, கிஞ்சித்தும் புத்தி யென்பதே இல்லாதவளா யிருந்தேன். என் பிதாவும், நீங்களும், எனக்கு மிகுந்த தப்பிதம் செய்து விட்டீர்கள். என்னுடைய முற்போக்கைப் பற்றி நான் அணுவேனும் அறியாதது, உங்களுடைய தப் பிதம் தான்.

கோகுல்:—என்ன, நீ மிகவும் நன்றியற்றவளா யிருக்கிறாய்? கமலா, இங்கே நீ சந்தோஷமா யிருக்கவில்லையா?

கமலா:—நான் சந்தோஷமாய் எப்பொழுது மில்லை; நான் மிகவும் சந்தோஷமா யிருப்பதாக எண்ணிக் கொண் டிருந்தேன். யோசித்துப் பார்க்கையில், உண்மையில் அப்படி யில்லை.

கோகுல்:—நீ சந்தோஷமாக வில்லையா?

கமலா:—இல்லை, குதூகலமா யிருந்தேன். நீங்கள் எப் பொழுதும் என்மேல் ஆசையோடுதா னிருந்தீர்கள். ஆனால், நம் வீடு, எனக்கு ஒரு விளையாட்டு அறை யைத் தவிர, வேறு ஒன்று மில்லை. நான் உங்களுடைய பொம்மைப் பெண்டாட்டியாக இருந்தேன். பிறந்த வீட்டில் தகப்பனுரின் பொம்மைக் குழந்தையாக விருந் தேன். என் குழந்தைகள், என்னுடைய பொம்மை கள். நீங்கள் என்னுடன் விளையாடும் பொழுது, அதை ஒரு பெரிய வேடிக்கையாக எண்ணினேன். நம் முடைய விவாகத்தைப்பற்றி இதுதான்.

கோகுல்:—நீ சொல்லுவதில் கொஞ்சம் உண்மை யிருக் கிறது. அதை நீ வீணுகக் கண்டபடி அதிகப்படுத் திச் சொல்லுகிருய். ஆனால், இனிமேல், வருங்காலத் தில், மாறுதலா யிருப்போம். விளையாட்டுக் காலம் ஆய்விட்டன; படிப்பினையை ஆரம்பிக்க வேண்டும்.

கமலா:—யாருடைய படிப்பினை? என்னுடையதா? குழந் தைகளுடையதா?

கோகுல்:—என்னுடைய பிரியமான கமலா, கேள்: இரு வர்களுடையவும் தான், உன்னுடையவும், குழந்தைக ளுடையவும்.

கமலா:—ஐயோ! அது ஒருக்காலும் முடியாது. என்னைச் சரியாகப் படிப்பித்து, உங்களுக்குத் தகுந்த மனைவி யாகச் செய்து கொள்ளுவதற்கு உங்களால் முடியாது.

கோகுல்:—நீ அப்படியும் சொல்லுவாயா?

கமலா:—நான்—எப்படி, எ...ன்—அல்ல, உங்களுடைய குழந்தைகளை வளர்ப்பதற்கு, அருகதையாவேன்.

கோகுல்:—கமலா!

கமலா:—நீங்களே சற்று நேரத்திற்கு முன், 'உன்னை நம்பிக் குழந்தைகளை எப்படி வளர்க்க விடுகிறது?' என்று சொல்ல வில்லையா?

கோகுல்:—ஏதோ, கோபத்திற் சொன்னேன்.

கமலா:—வாஸ்தவம் தான், நீங்கள் சொன்னது முற்றிலும் உண்மை. நான் அந்த வேலைக்கு அருகதையற்றவள் தான். நான் முதலில் எனக்கு வேண்டியவற்றைக் கற்றுக்கொள்ள முயலவேண்டும். அவ் விஷயத்தில் எனக்கு நீங்கள் உதவி செய்பவரல்ல. அதை நானாகவே செய்துகொள்ள வேண்டும், அவ் விஷயமாக நான் இப்பொழுதே உங்களை விட்டுப் பிரியவேண்டும்.

கோகுல்:—(திடுக்கிட்டு) நீ என்ன சொல்லுகிறாய்?

கமலா:—என்னைப் பற்றியும், மற்ற விஷயங்களைப் பற்றியும் நான் அறிந்து கொள்ளுவதற்கு, ஏகாங்கியாக, தனித்திருக்க வேண்டும். அக் காரணத்தினால், இனிமேல் உங்களோடு இருக்க முடியாது.

கோகுல்:—கமலா! கமலா!

கமலா:—இவ்விடத்திலிருந்து இப்பொழுதே நான் போக வேண்டும். இந்த இரவை லாஸினியினுடைய வீட்டில் கழிப்பேன்;—

கோகுல்:—உனக்குச் சித்தப்பிரமை பிடித்திருக்கிறது. அதனால், நீ சொல்லுவதை நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன். நீ போகக்கூடாதென்று, நான் கட்டளையிடுகிறேன்.

கமலா:—இனிமேல் எதைப்பற்றியும் எனக்குக் கட்டளை யிடுவது பிரயோசன மில்லை. எனக்கு என்னென்ன வேண்டுமோ, அவற்றை யெல்லாம் நானே செய்து கொள்ளுவேன். இப்பொழு தாகிலும், இதற்குப் பிற காகிலும், உங்களிடமிருந்து நான் ஒன்றும் எடுத்துக் கொள்ளப் போவ தில்லை.

கோகுல்:—என்ன பைத்தியம் இது!

கமலா:—நாளைக்கு நான் என் வீட்டிற்குப் போகவேண்டும். என் வீடாவது, நான் பிறந்த இடத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். அவ்விடம் போய்த்தான், நான் என்னசெய்கிறது என்பதைப்பற்றி யோசிக்கவேண் டும். அதற்கு, அதுதான் தகுந்த இடம்.

கோகுல்:—என்ன, தாறுமாருய் உளறுகிருய். கண், தலை தெரியாத, மதிகெட்ட ஸ்திரீயாக விருக்கிருய்!

கமலா:—ஆம், இனிமேல் கிஞ்சித்தாவது புத்தியை அடைவ தற்குப் பிரயத்தனப் படுகிறேன்.

கோகுல்:—உன் கணவனையும், குழந்தைகளையும் விட்டுவிட்டு, வேறுவீடு என்ன வைத்திருக்கிறது? ஜனங்கள் என்ன சொல்லுவார்க ளென்பதை, நீ அறிய வில்லை.

கமலா:—அதைப்பற்றி யெல்லாம் நான் சிந்திக்கவே யில்லை. எனக்கு எது முக்கியமோ, அதைப்பற்றி மாத்திரம் யோசிக்கப் போகிறேன்.

கோகுல்:—என்ன, தூக்கிப் போடும்படியான வார்த்தை சொல்லுகிருய்? உனக்கு முக்கியமானதும், பவித்திர மானதுமான தர்மத்தை நீ அசட்டை செய்கிருய்.

கமலா:—எந்த முக்யமான தர்மத்தைப்பற்றிச் சொல்லுகி றீர்கள்?

கோகுல்:—நான் அதை உனக்குச் சொல்லவும் வேண்டுமா? உன்னுடைய குழந்தைகளுக்கும், கணவனுக்கும் செய்யவேண்டிய கடமை, உன்னுடைய தல்லவா?

கமலா:—அதைப்போல முக்கியமானது, வேறொன்று இருக்கிறது.

கோகுல்:—இதைவிட முக்கியமான தர்மம் வேறுயாது?

கமலா:—என்னுடைய காரியங்கள்.

கோகுல்:—நீ ஒரு தாயென்பதையும், மனைவி யென்பதையும் பற்றி, முன்னம் யோசித்துப்பார்; ஊரார் நகைக்க மாட்டார்களா?

கமலா:—நீங்கள் முன்சொன்ன வார்த்தைகளை யெல்லாம், இனிமேல் நான் நம்பப்போவ தில்லை. நானும் என்னைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும். 'உலைவாயை மூடலாம், ஊர்வாயைமூட முடியுமா? ஊரார் சொல்லுவதை நான் பொருட்படுத்தப் போவ தில்லை.

கோகுல்:—கமலா, உனக்கு உடம்பு சரியா யில்லை, சித்தம் கலங்கியிருக்கிறது. உன் சித்தப் பிராந்தியினால், இப்படியெல்லாம் பேசுகிறா யென்று எண்ணுகிறேன்.

கமலா:—என்மனம் இன்றிரவு இருப்பதைப்போலத் தெளிவாக, என்றும் இருந்த தில்லை.

கோகுல்:—உன்னுடைய தெளிவான திடமனதுடன், உன் கணவனுக்கும், குழந்தைகளுக்கும் செய்யும் செய்கை இதுதானா?

கமலா:—ஆம்.

கோகுல்:—இன்னும் ஒரே ஒரு வார்த்தைதான் இருக்கிறது.

கமலா:—அதென்ன?

கோகுல்:—நீ இனிமேல் எனனை 'அன்பிக்க' மாட்டாயா?

கமலா:—இல்லை, இப்பொழுதி லிருந்து இல்லை,

கோகுல்:—உன் முழு மனதுடன் சொல்லுவாயா?

கமலா:—எனக்கு அதைச் சொல்லுவதற்கு மிகுந்த மன வருத்தமாகத்தா னிருக்கிறது. நீங்கள் எப்பொழுதும் என்மீது தயவாகத்தா னிருந்தீர்கள்; ஆனால் வேறென்ன செய்வது? வேறுவழி யில்லை. நான் இனிமேல் உங்களை 'அன்பிக்க' முடியாது.

கோகுல்:—இதுவும் தெளிவான மனதுடனா சொல்கிறாய்?

கமலா:—ஆம், முழுவதும் உண்மையாகவும், தெளிவாகவும் தான் சொல்லுகிறேன். இந்த வீட்டில் இனிமேல் நான் இருக்க முடியாததும் அந்தக் காரணத்தினால் தான்.

கோகுல்:—உன்னுடைய பிரியத்திலேனும், வேறு எவ் விஷயத்திலேனும், உனக்கு நான் ஏதாவது குற்றம் செய்தே னென்று, நீ சொல்ல முடியுமா?

கமலா:—ஆகா, அதற் கென்ன, தடையின்றி: இன்றைய இரவு ஆச்சரிய கரமான விஷயம் நடந்தபிறகு தான், இவ்வளவு நாட்களாய்த் தங்களைப் பற்றி நான் எண்ணியிருந்தது தப்பு என்பது தெரிந்தது.

கோகுல்:—இன்னும் கொஞ்சம் விவரித் துரைத்தால் விளங்கும். நீ சொல்லுவது எனக்குப் புரியவில்லை.

கமலா:—நான், இந்தத் தப்பிதம் செய்ததே முதல், ஏதாவதொருநாள் இதைப்பற்றிய வாதம் வந்தே தீருமென்று எண்ணினேன். இந்த வில்லியம்ஸ் கடிதத்தைத் தபாற் பெட்டியில் போட்டவுடன் நான் எண்ணின தென்ன வெனில், அந்த மனிதனுடைய நிபந்தனைகளை நீங்கள் அங்கீகரிக்க மாட்டீர்களென்றும், அவனிடம் 'இச்சமாசாரத்தை உலகம் முழுவதும் பகிரங்கப்படுத்து' என்று சொல்லிவிட்டு, அவன் அந்தமாதிரி செய்தபிறகு.......

குழந்தைகளை நான் பார்க்கவேண்டாம். என்னைவிட நன்ருகக் கவனிப்பாரிடத்தில் அவர்கள் இருக்கிருர்களென்று நான் அறிவேன். நான் இப்பொழுதிருக்கும் நிலைமையில், அவர்களுக்குச் சிறிதும் பிரயோசனப்படுகிறவளல்ல. இதோ, வீட்டுச் சாவிகளையெல்லாம் வைத்துவிட்டேன். இந்த வீட்டுச் சாமான்கள் இருக்கிறது முதலியன, என்னைவிட வேலைக்காரிக்கு மிகவும் நன்ருகத் தெரியும். நான் போய் வருகிறேன்.

கோகுல்:—என்னைப்பற்றியே நினைக்கமாட்டாயா ?

கமலா:—உங்களையும், குழந்தைகளையும், இவ் வீட்டையும் பற்றி, நொடிக்கு நூறு தரம் நினைப்பேன்.

கோகுல்:—கமலா, உனக்குக் கடிதம் எழுதலாமா ?

கமலா:—கூடாது, கூடவே கூடாது.

கோகுல்:—ஆனல், நீயாவது எழுதுவாயா ?

கமலா:—முடியாது.

கோகுல்:—உன்னுடைய செலவுகளுக்குப் பணமாவது அனுப்பலாமா ?

கமலா:—வேண்டவே வேண்டாம், ஒரு அன்னியனை உங்களிடமிருந்து, நான் ஒன்றும் பெற்றுக்கொள்ள மாட்டேன்.

கோகுல்:—கமலா, ஓர் அன்னியனைவிட ஜாஸ்தியாக ஒரு போது மிருக்க முடியாதா ?

கமலா:—(தன் கைப் பெட்டியை எடுத்துக்கொண்டே) ஆ! மிகவும் அதிசயமான விஷயம் நடந்தால்,—

கோகுல்:—அது இன்னதென எனக்குச் சொல்லு

கமலா:—நாமிருவரும் வேறு மாதிரியாக மாறவேண்டும். அந்த மாதிரியான விஷயம் நடக்கு மென்று, நான் நினைக்கவே யில்லை.

கோகுல்:—ஆனால், அதை நான் நம்புகிறேன். அது எந்த மாதிரியான மாறுதல் என்று சொல்லு.

கமலா:—நாம் இருவரும், ஒருவர் மனதை ஒருவர் அறிந்து ஏக மனதாகப் போனால்தான், நம்முடைய விவாகம் புனிதமாகும். (என்று சொல்லிக் கொண்டே போகிறாள்.)

கோகுல் சந்த் கன்னத்தில் கையூன்றினவனாய், ஏதோ திகைப்புற்று உட்கார்ந்திருக்கிறான்; சற்றுப் பொறுத்து: "கமலா! கமலா!" என்று கூவுகிறான். எழுந்திருந்து அங்குமிங்கும் பார்க்கிறான்; ஆனால் எங்கும் அவளில்லை; போய்விட்டாள். கீழே வாசற் கதவு திறந்து மூடும் சப்தம் கேட்கிறது. அதினால், வாசற் பக்கம் போனவள் நம் கமலா தான் என்று, சொல்லவும் வேண்டுமோ?

முற்றிற்று.

---

P. R. RAMA IYAR AND CO., PRINTERS, MADRAS.

# பின்னுரை

கதாநாயகி (கமலா):—இறுதியில் வெறி கொண்டவள் போலாகி, கொண்டவனையும் குழந்தைகளையும் விட்டு, சித்த விருத்தியைத் தேடித் தனியே புறப்பட்டுப் போகிறாளே, இது நடக்கக் கூடியதா, நியாயமா, என்ற கேள்வி, கதையைப் படிப்பவர் ஒவ்வொருவர் மனத்திலும் தோன்றும். எவருக்கும் தன் மானமே மற்ற குணங்களுக்கு அடிப்படையாவது; அந்த அபிப்பிராயமே அதிர்ந்து, அதன்மேற் கட்டிய மனக்கோட்டை யெல்லாம் கணப்பொழுதில் இடிந்து விழுந்து விட்டால்; உரோஷமுள்ள பெண் ஒருத்தி, என்னதான் செய்யமாட்டாள்? கமலாவுக்கு இனிச் சுகம் கிடையாது; அவள் மனத்திருள் நீங்கியதே யொழிய அவள் வாழ்க்கைக்கு விடிவு காலம் சட்டென ஏற்படாது, நடக்கக் கற்ற குழந்தை தவிழக் கற்றதாம் தாயார் செய்த தவம் என்பது போல, புருஷருக்கு வாழ்க்கைத் துணையாய்க் குடித்தனத்தை வகிக்க வேண்டிய ஸ்திரீகளைப் "பேதை"யராகவும் "பாவை" யராகவும் வளர்த்து விடும் ஜனசமூகம் செய்த தவப்பலனே.

ரா.

